ஆங்குறுமுனிவரெல்லாமழலெனப்பொங்கிச்சீறிக்
கோங்கணமுலையினார்தங்குழுவினைநோக்கியாவி
னீங்கடாவசெல்லுகின்றீர்நெறிதருகற்புநீத்தீர்
பாங்கிலவிறப்பதென்னேபடருறும்பதியிலென்றார். (௧௯௭)

மாதவர்மொழியக்கேட்டவனிதையர்புகல்வாரிந்த
நாதனைக்கண்டோர்மிக்கநலம்பெறுமுத்தராவா
ராதலாலன்னோர்க்கென்றுமழிவுண்டோபித்தர்போலப்
போதமின்முனிவரென்னேபுகன்றனர்போலுமென்றார். (௧௯௮)

இந்தவாறுரைத்துநின்றவேழையர்தம்மைநோக்கிச்
சந்த்ரசேகரனுமன்பாயத்தானருள்செய்யப்பின்பு
வந்தனர்மகிழ்வினந்தவரதனைமனத்துட்கொண்டே
பந்தமிலாதோர்தங்கள்பதியினிலினிதுபோந்தார். (௧௯௯)

அரிவையர்போயபின்னரயனருகுநின்ற
திருவினாயகனுமந்தச்சேயிழைவடிவாய்நின்றா
னிருடிகள்சிவனையெண்ணாதிருந்தவமிழந்துபின்னுங்
கருதியதன்மைகாணக்கமலத்தானமுதலோர்வந்தார். (௨௱)

வந்துறுவானோர்செய்யமலரயன்முகுந்தன்மற்றச்
சுந்தரமுனிவோர்யாருஞ்சூழ்ந்தனர்தொழுதுபோற்ற
நந்தணிகுழையானவேணுநாயகனம்பனெங்கோன்
கந்தரக்கறுத்ததேவன்கருணைகூர்ந்தினிதுநின்றான். (௨௱௧)

நின்றிடுமுதல்வன்றன்னைநெருப்பெழவிழித்துநோக்கிக்
கொன்றிடவேணுமென்றுகூறினார்கொடியசாபங்
கன்றியமுனிவர்சொன்னகட்டுரைகருணையான்பாற்
சென்றிலவதனைக்கண்டுசெய்வதேதினிமேலென்றார். (௨௱௨)

தங்களினறிவுமிக்கதாபதர்கருதிச்சொல்வார்
புங்கவர்நீங்கள்சொன்னசாபம்பொய்யானதென்றா
லிங்கினியுரைப்பதென்னையெமக்கெதிராகநிற்கு
மங்கவன்சிவனேயாகுமவனையார்கொல்லவல்லார். (௨௱௩)

என்னினுஞ்சிலவர்சொல்வாரிங்கிவன்றாததனுக்கும்
பன்னியாகற்புநீக்கிப்பரிபவப்படுத்திநம்பான்
முன்னுறவெள்காவினான்முறைமையோவிதுதானுங்கண்
மன்னுறுமரபுக்காமோவசையிதின்மேலுமுண்டோ. (௨௱௪)

பரிவுடனின்றோர்கூறப்பண்புறுமியோகர்சொல்வார்
தரையினிலெவர்தாமும்போற்றவம்பொருளாகுமென்றே
திரிபுரமெரித்ததேவைச்சிந்தியாதிருந்தாருங்கள்
புரையறுதீக்கவிந்தப்புதுமைசெய்வித்தாரென்றார். (௨௱௫)

எவனெவன்வருந்திச்செய்யுமிருவினைத்தொடர்ச்சிக்கெல்லாஞ்
சிவனபலந்தருவதன்றிச்செயலபிறிதொருவர்க்குண்டோ
வவனையுள்காதுசெய்ததவமவமாதுமன்றிப்
புவனங்களெவையுஞ்சானைசெய்துடனபாடிசெய்வாரல. (௨௱௬)

நனறிதுசொன்னீரோ நமைசெய்டாலவர்க்கோவார
கொன்றைசூடிறைவனுக்ரோகாதையாகஉவிருசெய்து
நனறியகருமம்யாகநதுயநாடிக கர வும்
பொன்றிடச்செயவநணடோபெதவனயாரோவென்பார். (௨௱௭)

பிரகிருதிவனருளெனபாரபெருமையியவ கவெனபார
மதநம்முகாணுமெனபாரவியனோவலலவென்பா
ரொத்தனைதறைசெயதாலுமிரபபவர்போலவநது
நிததிலமுலையாசறைபீககவுமீதியுணடோ. [௨௱௮]

எனனவுஙகுறைசனும்பாபிருப்பதாயிறையோனெம்மான்
மனனுமாதறைகடாபபான்வலியயநதருளசெயகாறற
பானியாமுமனருனபதமலாயனந நபோறித
னனோபெரியபநதைதீஙகளுநதொழுமினனைர். (௨௱௯)

கயிலையிநப்போனுறகரத்தில முநதலியுண்டே
யிலிடமிலகுகணடமனாயினிலாடையுணடே
பயிலுமயவகைதானிலலாளயனபோம காமசமகாணடு
மயலொமபலிகருவநதோனறனையினிவணஙகலாமோ. [௨௱௰]

மறதசிதனைகூறிவாதனைநோக்கிசொலவா
ருறறனீபாவனெங்கேயுறபவனுனபோது
ருறறிலபனனிமாரைக்குறசெயதாயுனககேதுண்டாரு
சொறறிசரிதையெனகொலசோாயிலாதுளைபபாயெனரூர். [௨௧௧

எனறியாகூறநாதனினியபுனமூரலசெயது
நனறுமறநைதாயுநமககிலைநமருமிலலை
பொாரிவுலகமெனபதெங்குநம்முலகமாகுந
துனறுமாருயிர்களுறறாசுகதுககமெமக்கினறுமால். (௨௧௨)

இன்னமொன்றுரைப்பக்கேண்மினிநதமோகினிதானெந்தம்
பனனியாம்பிறாமேலுளளமபறறிலாள்கறபுமிககாண்
மினனிடைக்கரியகூநதலவெண்ணகைபபவளச்செவ்வா
யனனமிஙகிவளைாடிமாண்டவரநேகராமால். [௨௧௩]

பலபலவணடமெலலாம்பரிவினுண்டாககியிநத
வுலகெலாம்பொறியதொன்றுலொணபொடியாகச்செய்வோ
நலனுறுவிருபபுமில்லைநவைதருவெறுபபுமில்லைப்
புலனறியோகரேனும்புலப்படாரொம்மையென்றூர். (௨௧௪)

ஆசாலாலிகத்திலன்பாயறிவுடையவர்கட்கெல்லா
மேதகுசுகத்தைநல்கிவிருப்பொடுமிடுப்பேபாமெங்கு
மேதமிலசித்தித்தானமித்தலமிதிலன்றோர்க்கு
நீதியிற்சித்திநல்கநினைந்திவண்வந்தோமென்றார். [உகச]

ஆவிநாயகன்முன்கூறவருந்தவரிகழ்ந்துசொல்வார்
மூவகையுலகுக்கெல்லாமுதல்வனியாங்கெலங்கள
பாவையர்கற்புநீகவிப்பழிசெயதாய்பகைதானுண்டோ
வேவரித்தனமைசெயதாரொன்றுநீயாரோவென்றார். [உகரு]

மந்திரவலியாற்காபின்மாதரைமயல்செயவிகந்
தந்திரமிவனுகருணடாஞ்சாபங்கடனைசசாரம
லேந்திரம்பலவுஞ்செயவானிவனைநாங்கொலலவேணடுஞ
சிந்தனையாபிசாரவோமததைச்செயவோமெனறார். (உகள)

என்றனர்பலருங்கூடியெரியெனவெழுந்துபொங்கித
துன்றியமுனிவரொல்லாந்தூயவேய்வனததினமேல்பாற்
சென்றனரங்கோராங்கொலலையிறசெறிந்துதீயோ
ரொன்றியகொடியவோமகுண்டமுண்டாக்குவிததார். (உகஎ)

அங்கதிலெரியுண்டாக்கியதற்குளசமிதையாதி
பொங்குநெய்திரவியங்கள்போதவேகொணடுபோநதார
தங்களிறபெருமைசேருந்தாபதாசடிலவேந்தா
திங்கள்வேணியனைக்கொல்லச்செயதனாதீயவேள்வி. (உகஅ)

ஆயதோர்வேளவிததீயிலழலெனவுருததுசசீறித
தீவிழிததறுகட்செங்காறறெறுவலிகொடியதோறற
மேபவெஞசீறறபேழவாயவெடிகுரான்முறுகதுவாலு
மேயவள்ளுகிரினோடும்வியாகரமெழுந்ததன்றே. [உஉ0]

தோனறுமப்புலியைநோக்கிதொழுதனாமுனிவரெலலா
மூன்றுகட்பரனையின்னேமுடித்தியெனறியம்பச்சீறி
யென்றெழுபுலியைப்பறறியிடருறவுரிததத்தோலை
யான்றதொன்முனிவாகாணவாடையாயுடுததானையன். [உஉக]

வேறு

அன்னதுமுடித்தபின்னரத்தழலினகத்தெழுகணிச்சியொன்றதனை
மன்னுமத்தீயோர்விடுபபவேநெருப்பாயவாளுடுநிலனுமொன்றுகத்
துனனியேவரலுமெனனையாளுடையசோதியானெதிருறச்சென்று
பன்னருமதனைச்செங்கையாலெடுததெம்படையெனவிருத்தியென்றுரைத்தான்.

நித்தனங்கையிலிருந்தனபின்னுநீதியின்முனிவரர்சீறி
வைத்தவேள்வியிலோர்வகையிருசெவிமும்மதம்பொழிமதகரியெழலும்
பித்தனைக்கொல்லென்றனுப்பிடவெகுண்டுபேருலகஞ்சவேவரலுஞ்
சத்துருவாம்வெங்கரியினையுரிததான்றனவரார்த்திடப்போர்த்தான். (உஉ.ங)

இந்தவாறுதானநீநதெமைப்பூசைசெய்துனிதாய்ச்
தந்தையனபொடிபோற்றிசெய்தழிகிலீர்திகைத்திர்
பந்தமாம்வினைப்பாசத்தாறபருவராலுற்றீர்
புந்தியன்றிதுநமைத்தினம்பூசனைபுரிவீா. (௨௪௨)

முரியநெலைவயிலுயர்திருமூலலிங்கத்தை
விதியினறசனைசெய்பவர்விருமபியேதொழுவோர்
துதிசெயவோாபணிவோாவலஞ்சூழுவோரிவர்கள்
கதியைமேவிநறகணதொடுகயிலையிலிருப்பாா. (௨௪௩)

ஆதலாலந்தவிலிங்கதைதையன்பொடுபோற்றி
நீதியாறசிவபூசனைபுரிநதெமைநினைநதே
கோதறுநதவஞ்செயதிடுமெனறிவைகூறி
மாதுபாகனம்மோகினிதனனெருடுமறைநதான. (௨௪௪)

அனனமாதவர்காண் சிலாவகையவவைமறைநத
வெனனையாளுடைநாயகன்கோமலைபுருநது
முன்னசெய்தியமாதொடுமூலலிங்கததின
மனனுபேரொளியூடகமகிழவொடுபோநதான். (௨௪௫)

அவவணல்போடபினநதரததவரெல்லாமகன்ரூா
மணணுமேளாகளுமுனிவரும்வரதனைபபுகழநதார்
நண்ணுமததருவனததுறைமுனிவரர்நல்மென
றுண்ணரினைநதிலாமானததாலழிவுறுமுளததாா. (௨௪௬)

ஆயகாலையிற்பூகம்பமுதலியவான
தீயதுன்னிமிததஙகளும்பலபலசெறிய
மேயவனனதுகண்டுமெய்விதிாததுளநடுங்கி
மாயமோவிதுவெனறனாமனததிடைமதிததார். (௨௪௭)

பின்னுமத்தருவனச்துறைபெருநதவமுனிவோர்
மன்னுபேரவைசெனறுதங்குழுவொடுமருவித
தன்னையொப்பவர்யோகாகடனித்தனிநினைநது
முன்மறைநதிடுசிவன்செயலியாவையுமொழிவார். (௨௪௮)

மையுநுண்ணிடைமாதர்கற்பழித்ததுநமது
துய்யநற்றவமாலினுலழிததுநதொலையாச்
செய்யவேள்வியிலெழுநதவைசிதைத்ததுஞ்சிவனே
மெய்ம்மையாம்பொருளவனலாலுலகில்வேறுளதோ. (௨௪௯)

நம்மைத்தான்பொருட்டாகவேநம்முனம்வநதார்
தம்மைத்தானறியாமலிவ்வாறுளநதளர்நதெஞ்

செம்மைத்தேவர்தர்தேவினிநமக்கருள்செய்ய
மெய்ம்மைத்தாநறுணையகத்தியனேயெனவிரும்பி. (௨௫௰)

பெருமைமாதவர்பேசலுமற்றுளமுனிவோர்
கருமமீதநன்றுமெனக்கருதினாகளித்தார்
புரமெரித்தவனருளபெறலாமெனப்பொங்கி
யரகராசிவசிவாவெனவெழுநதனரார்த்தார். (௨௫௧)

எழுந்தமாதவரிறைவனைக்காணுமிச்சையினு
லழுநதுநெஞ்சினரனைவரும்வாநதவிர்மதியின்
கொழுநதுசூடிஞோதமைபபணிகுறுமுனியடியில்
விழுநதுபோற்றினாதோததிரம்விருபபடனபுகலவாா. (௨௫௨)

கரகபாலனெல்வேலிநாயகனடிக்கமலம்
விரைமலாகொடறசனைசெயதுவிருமடமாதவனே
பொருவில்செநதமிழுதவியபுண்ணியபபொருபபே
சுருதிதோகுறுமுனிவனேயெனததுதிசொனனூா- (௨௫௩)

கதிகொடுப்பதுகருமமூர்தருமமுமாமென
றிதுவரையினுஞ்சிவனபொருளலலவெனறிருநதோம்
மதிடணிநதவனித்தருவனததிடைவாநதே
புதுமைசெய்தெமககறிவிததானபொருளெனுநிலேயே. (௨௫௪)

பின்னுஞ்சொல்லுவார்யாங்கள்செயபிழையெலாம்பொறுத்து
முன்னர்வநதிடுசிவனடிமுறைபணிநதலமா
லனனதாலுடன்மறைநதனனவனறனைககாண
நின்னைவநதடைநதோமெமககருளசெய்நீயெனறார். (௨௫௫)

அந்தவாசகங்கேட்டலுமருநதமிழ்முனிவன்
சிந்தையன்பொடுமிருக்கையுநலகினனசிறப்பாய்
முந்துமன்பொடுமுகமனுஞ்சிலசிலமொழிநது
புநதிகூர்நதிடப்பினனருளமொழிபுகல்வான. (௨௫௬)

நீங்களிப்படிமறைநெறிவழுவியநியம
மாங்கறிநதையகறறியேயுமககருள்செய்தான்
றேங்குகஙகைசூழிறைவனைதெரிசிக்கவேண்டிற்
பூஞ்சமலபபுததேண்முனம்போகுதுமென்றான். (௨௫௭)

வேறு

கனமறைதேர்குறுமுனிவன்கருதியன்பாயிந்தவுரைகழறலோடு
மிலஞ்சடைமவுலிபுனையிருடியாகளிசைநதிடமறறிவர்களோடு
கலனுறமற்றெவவுலகுமடஙகடதகுறுஞன்முகத்திலுமமண்ணயனம்பூத்த
மலாயனுரினிதுறையுமவேபதியாநகரினிடைவநதார்மன்னோ. (௨௫௮)

வந்துமலராசனத்தில்வதிந்தவொருநான்முகனைவணங்கிவாழ்த்திச்
சிந்தைமகிழ்குறுமுனிவனருகிருப்பத்தவமுனிவர்செங்கைகூப்பிப்
புந்தியன்பாயதொழுதுமலர்ப்பொன்னடியினருச்சித்தேபுகழ்ந்துபோற்றி
முந்துவினையான்மறையின்முறைதிறம்புமெமக்கருணீமுதல்வாவென்றார். ௨௮௯

என்னலுமற்றவர்க்கருள்செய்திருந்தமிழ்மாமுனிவரனையினிதுநோக்கி
மன்னுதவமுனிவரொடும்வந்திடுமக்கருமமெனனென்றுவழங்கென்றோத
அன்னவனுமினிதுரைப்பானிருந்தவர்கண்மோகினியாலழிந்தவாறும்
பன்னியர்கற்பழிந்ததுவும்வேள்விபலவழிந்ததுவும்பகரக்கேட்டான். (௨௯௰

வேறு

கேட்டவுடன்றவமுனிவோர்தம்மைநோக்கிக்கேடிலான்றனைமறந்துகெட்டீர்நீங்க
ளீட்டுதவமில்லறமுமிழந்தீரெங்கோனிணையடியைநினையாமலெனசெய்தீரோ
தீட்டுதமிழ்முனிவனெனுமவருந்தலாலுந்தீவினைகணீங்கிநீர்சிவனைப்பாலன்பு [மின்
வேட்டுவருமியல்பாலுமினிமேலெந்தவிமலனார்செய்கையெல்லாம் விளம்பக்கேண்

சாந்தமுந்தருவனத்திலிருந்தீர்செம்பொற்றரும்ரசபைநாயகனைத்தொழற்கண்ணுனைச்
சிந்தைசெய்யீர்காந்திமதித்தாயைவாழ்ந்தீர்சிற்றம்பலநாயகனைத்தெரிசித்தேநதீ
ர்ந்தநிலையறிந்துமனபாயிரங்கிறும்பாவிரப்பவணப்போலின்பமுறும்வடிவினேடும்
வந்தவனைவணங்காமலிகழ்ந்திருங்கள் மாதவமேலாமிழந்துமயங்கினீரால். ௨௯௨

நீதிதருநாயகனைக்கருணையானைநெலவேலிநாதனையேநினைந்துபோற்று
தேதுதவஞ்செய்கின்றீரெவர்களேனுமிறைவனையேநினையாமலியற்றினாலேன்
மேசந்தாற்றவமிழந்துகவலைகூரந்தும்மதினியிலுளமெலிந்துவெறுமையாகி
யாதுலர்போலெவரிடமுந்திரிந்தும்பின்னுமனலவிரவுவெந்நரகிலழுந்துவாரால். (௨௯௩

முன்னுமுங்களைப்போலரனைநினையாதுசிமுனிவரொடும்வானவர்களெவருஞ்சூழ
மன்னுமொருமகமியற்றுதக்கனந்தமகத்திலெனும்வந்தவானவர்களோடுந்
துன்னுமனைவியாமகளசுற்றத்தோடுந்தொலைத்திட்டானென்றுமுதற்றாயோரொல்லா
மின்னமவனபெயர்நினையாசிவத்துமாகி யெனப்பெண்ணணி நீங்கள்செய்ததென்
சொல்வோமே. (௨௯௪)

மாயவனுநானுமுன்னோர்காலந்தன்னின்மனத்தகந்தைபாலறிவுமயங்கிப்பேசி
நாயகனையெங்கோனைத்தொழுதுபோற்றாமதடியுமுடியுங்காணமினென்று
னுயதொருகோலமனமாகிநாங்களண்டகோடியுந்துருவியறியோமந்தத்
தூயவனையெதிர்கண்டுதொழுதீரில்லைசஞ்சாரகுறிலைக்கடற்றாழ்ந்துசுழல்கின்றீரோ.

வேறு

ஆதலர்வந்திடிலாசனல்கிப்
போதுகொடற்சனைபூசனைசெய்தே
கோதுவிருந்துகொடுப்பதையல்லான்
மாதவர்சாபம்வழங்குவதுண்டோ. [௨௯௬

தாருவனத்துறைதாபதர்கேண்மின்
பூருவமாதவர்பூசனைசெய்தே
வாரணிகொங்கைமடந்தையைநல்குஞ்
சீர்பெறுகாதைசிறப்பொடுசொல்வோம். [௨௬௭]

மேயதோர்நான்மறைவேதியர்தம்மி
லேயகலைப்பொருள்யாவுமுணர்ந்தே
ஆயதவம்புரிசுதரிசனப்பே
ராய்வனவஞ்சியருந்ததிபோல்வாள். (௨௬௮)

கானநெய்வாசநலந்திகழோதிப்
பானலைநேர்குழைபாய்கயல்விழியாள்
வானிலெழுங்கலைமாமதிவதனத
தேனுறுதேமழலைச்சிறுசொலலாள. (௨௬௯]

சிந்துரமிலகியசிறுபிறைநுதலாள
கந்தரமுலவியகந்தரமுடையாள
சுந்தரவரைநிகர்தோளணிகுலவு
மந்தரவரையெனவளரிளமுலையாள. (௨௭௰)

இலதெனவுளதெனவிலகுநுண்ணிடையாள்
சுலவுறுகதலியிதெனவுயாதுடையாள்
விலைபெறுநவமணிமேகலையுடையாண
மலர்மிசையனமெனவருபிடிநடையாள் [௨௭௧)

திருமகண்மகிழ்வுறுதிருவழகொடுமுன
வருமினமயிலியன்மனைவியைநோககி
யரிவைநீயறிகுவையதிதிகளொனநல்
லுருவொடுவருவனம்முமையொருபாகன. (௨௭௨)

ஆதலினுனுயரதிதிகள்பூசை
நீதியினவர்சொனநெறிவழிநலகி
மேதகுமில்லறமேன்மைகளெல்லாந
நீதறவருளொடுசெய்குவையென்றான். (௨௭௩)

மற்புயமுடையதன்மகிணனிதுரைபபக்
கறபுடையாளிருகண்ணருளுடையா
ளற்புடையுாண்மெய்யருந்ததியனையாள்
பொறபுடையாளறமேபுரிநாளில். (௨௭௪]

பைந்தொடியன்பொடுபதியுமறிய
வந்தகனவறுமோரநதணனுகி
வந்தனன்முனியகல்வேளையில்வரலுஞ்
சுந்தரமயிலனையாளெதிர்தொழுதாள். (௨௭௫]

தொழுதனளாசனநல்கினடியேதாய்ப்
பழுதிலருச்சனைபண்ணினள்பரவி
யிழுதுடனமுதுநைவேத்தியமேற்றி
வழுவறுபூசனைமகிழ்வொடுசெய்தாள். (௨௭௬)

புரிந்தபினிருந்தவிப்பிரனித்துப்க வான
திருந்தியபூசனைசெய்தனைநன்றுங்
கருந்தடங்கயலவிழிககனிமொழியனமே
வருந்தியமயல்கெடமருவுகவென்றான. (௨௭௭]

வேறு.

மனறலங்குழலாளந்தவாசகங்கேட்டலோடு
மென்றுநல்லகிதிபூசையிற்றந்திடாதியற்றியன்றோ
ரானறியவிச்சையுள்ளமுவந்திடக்கொடுத்தருளே
துன்றுநல்லறமதெனறுசொனனெறிமுறையுநோற்றே. (௨௭௮)

புலரும்பொறபுவாயநதபூஙசொடிகமலம்பூத்த
முகிழமுலைபவளச்செவவாயமுருந்திளமுறுவன்மின்னு
ணகைமொழியிநுவெனறெணணலஞ்ஙன் வனவன்
மகிழ்வுறலகறபெனறெண்ணிமனமதுபொருந்தினாளால. [௨௭௯)

குயினமொழிமயிலின்சாயறமோங்கிளமுலையாளவானப்
புயலனகுழலாளிாதவாறுளம்பொாநதசால
மயலறுகேள்விவேதமவழுவறவுணா ந்து
முயல்குணபபெருமைமிக்கமுனிவரனமனை க்கு தான்- [௨௮௦)

வந்துமுனிவனறனைமறலிகணடுவந்துநோக்கிச
சிநதை னபொடுமுனனின செயயமாதவததோயுன்றன்
சுந்தரமனைவிதனனை தநதாயநதிடவருள வாயெனனப்
புநதியினமகிழுந்துகறபினபூவையைநலகினானால்- (௨௮௧]

கனிமொ ழிமயிலையினபங்கலநதிடுமவரோபோல
மனையிடையோாபாலநதபுரததிடைமகிழவினோடும்
புலை பூமேனிதீண்டானபொருந்தியவனையின்னைகி
நனைமலாககுழலாள்கறபுநன்முனிவருகதுங்கணடான்- (௨௮௨)

அநநிலையமளிநீங்கியநதணனுருவமாறித்
தன்னுருவெடுததகூற்றுததவமுனிதனனைச்சார்நதே
நனனெறிவழுவுறுமனற்றவமபுரிநதுஞானந
துன்னியமுனியுனபத்திசோதிக்கவநதேனென்றான்- (௨௮௩)

பொன்னுலகாளுஞ்செல்வம்பூவுலகரசுபொன்றோ
டனைநற்றவங்களசெயதபுணணியமளித்திட்டாலு
மனனுநீர்வைபபிறறங்கண்மனையினின்மகிழ்ந்துவாழு
நனனுதறனையுன்போலியாவரோநல்கவலலார்- (௨௮௪)

வித்தகமுனிவமாதைவிரும்பினேனல்லேனந்தப்
புத்தமுதனையாளோடுமனையறம்புரிந்துவாழ்தி
யத்தநின்பேர்சொன்னோர்க்குமவமிருத்தில்லையென்னாச்
சித்தமதுவந்தசாற்றித்தென்றிசைக்கடவுள்போனான்- (௨௮௫)

அகமகிழ்ந்தத்திருபூசையினைத்தாமரையனந்தோ
விகழ்வரோவென்றுசெய்யவெழினமலர்க்கமலப்புத்தேள்
புகலவப்பொருவிலாதான்புகன்றவாசகத்தினுண்மை
திகழ்மனமுனிவர்தோந்துசென்னிமேற்கரங்கள்கூட்டி. (௨௮௬)

ஆகமுண்ணடுங்கிநின்றேயமலனையறத்தினைசெலவி
பாகனைப்பணிமெய்யானைப்பரமனைநிந்தைசெய்த
சோகமதுடையோஞ்சாபஞ்சொல்லியசிறியோமின்ன
மோகையினிருந்துவாழவேண்டுமோவுலகந்தந்தோய். (௨௮௭)

மலர்மிசையிருக்குந்தேவேவாணிதன்கொழுனவேத
நிலைதெரிந்துரைக்குந்தமுணமைநீதூயாய்நினதுசெம்பொற்
சலசமெனபாதந்தானேசரணமென்றடைந்தோம்பாந்தட்
கலனணிபரமற்காளாயக்காண்பதற்கருள்வாயென்றார். (௨௮௮)

இன்னவாறிவர்கள்கூறவெழின்மலர்மிசையோனசொல்வான்
மன்னுசெஞ்சடையீரிந்தவையகமதனில்யாரும்
கன்னியோர்பாகனறனனைக்கருதியநினைந்தியாகந்
துன்னுநற்றவங்கள்செய்துதூயாறகதியினுவார் (௨௮௯)

மற்றவைபுரியாரெல்லாமறலினசபாசமெய்யிற
சுற்றுறவெங்கொழுகிசசுடுசழனரில்வீழ்ந்தே
முற்றுறவழுங்குவாரகண்முனிவர்காசரதமபாவம்
பற்றறவரங்களசெயவாரபரனைநெஞ்சிருத்துவாரே. [௨௯௰)

இந்தவாறுருமெங்கோனிறையவனறன்னைநீங்க
ணிந்தனைசெய்துநீதிததவங்களையிகழ்ந்துநின்றீர்
பந்தமாம்வினைசடரும்படியுங்களிடத்தில்வந்து
முந்தவெம்முதல்வனசொன்னமொழியினைப்புகலுமென்றான். (௨௯௧)

புங்கவன்கமலப்புத்தேள்புகறலுமுனிவர்சொல்வார்
பங்கயத்தேவேயெங்கள்பால்வந்துபரையோர்பாகன்
றங்குமெம்மயக்கநீக்கித்தன்னருளினிதினல்கி
மங்குல்சூழ்தேவதாருவனத்துறைமகாலிங்கத்தை- [௨௯௨)

சிறந்தொளிர்பிரமமாகுந்திருமூலலிங்கந்தன்னை
மறந்திடாதென்றுமனபாயமகிழ்வொடுதெரிசித்தேத்தி
யறந்தவம்புரிந்துதம்மையகத்திடைநினைந்துநாளு
நிறைந்திடுபூசைசெய்துநியமமோடிருப்பீரென்றே. [௨௯௩)

அத்தனிவ்வாறுசொல்லவறிவிலேமகாஜைதகண்டு
வித்தகன்மறைதலோடும்விரும்பிநும்மருங்குவந்தேம்
பத்தியில்லாதவெம்மைபரிவுறப்படுத்தியந்த
நித்தனைக்காணுமாறுநீயருள்செயவாயென்றார். (௨௬௪)

என்றிவர்மொழியக்கேட்டவெழின்மலாவேதனெங்கோன்
றன்றுணைப்பாதமுன்னிதகலைமிசைக்கரங்களகூப்பி
நன்றறிவில்லாதம்மைநாடிவந்தாணடுகொண்ட
கொன்றைவேணியனேபோற்றிகுழகனேபோற்றிபோற்றி- ௨௬௫

இன்னவாறரனையேத்தியெந்நினைறமுனிவாதம்மை
மன்னுறநோக்கிசசொலவானவரதனமுனமொழிநதவாறே
பொன்னகர்புகழநெலவேலிபபுரததிலடையினிதினோடு
துன்னியசிவலிஙகததைததொழுதனுதினமும்போற்றி. (௨௬௬]

மற்றுமவ்விடத்தினமுக்யமானதாம்பிரதசாறபொன்ற
ூறறிடுமிலிங்கமவைநதுபபூசனையுவந்துசெய்தே
நறறவக்குமபரோடுநன்குடனிருநதேயனறோ
சொறறிடமுறையினீங்கடயதறமபுரிவீரொன்றுன. (௨௬௭]

அநதநறறேவதாருவனத்தினிலன்பினோடுஞ்
சிநதூநதுறைநீராடிச செயதவமபலவுஞ்செயதே
வநதுமுனறருமதேவனமகிழபூசைபுரிநதுபோறறுஞ்
சுநதரலிங்கநதனனைநீங்களுநதொழுதுபோறறி. (௨௬௮)

இனனதாம்பதநியோடுமிருநதவணிணிபபூசை
மனனுறச்செய்துபோறறிவாதனைநினைநதுவாழுநதிந
துன்னுநறபருவமொனறிவ்வாறுடனறுஞலநதபினனா
முனனுறவநதுதோன்றிமுடிவிலானருளசெயவாறுல். [௨௬௯)

சகததினின்முக்யமாகுநதாருகாவனததிலிநத
வகததியரோடுஞ்சென்றங்கருநதவமியற்றின்மாசி
மகததினிலுங்கணமுன்னாவநதருளசெயவானெங்கோன்
மிகததயவொடுஞ்செல்வீரொனறுரைசெயதானவேதவேதன்- [௨௭௰)

அங்கதுபுகலக்கேட்டவகத்தியர்முனிவரெல்லாம்
பங்கயன்கமலப்பாதம்பணிநதனாவிடைகொண்டேகிச்
செஙகண்மால்வானோரன்பாய்ததெரிசிததுபபோறறநாளுஞ்
சங்கரனினிதுவாழுநதாருகாவனத்தில்வநதார். [௨௭௧)

வநதயனுரைத்தவண்ணம்வருநதிரைப்பொருனைசேர்ந்து
சிந்தூநதுறைநீராடிச்சிவாலயமதனிற்போநதே
சுநதரமூலலிங்கநதனைத்தினநதொழுதுபோற்றிப்
புந்தியன்போடுமிக்கசிவார்ச்சனைபுரிநதார்மன்றோ. (௨௭௨

ஆயதொன் மூனிவராகுமறுபதாயிரவரெல்லா
மேயதம்பெயரினுவ்வோரிலிங்கத்தைவிரும்பிவைத்தே
சாபகனறனையன்பாய்நலம்பெறநினைந்திவ்வாறு
நேயமோடிருந்து பூசைநித்தமும்புரியுங்காலை. (௩௱௩)

வருடமொராறுனபின்னர்வருமாசிமகத்துவந்த
விருடிகண்முனபுநாதனேயெனனையாளுடையநாதன
கருதுபொற்கபாலமேந்துகங்காளகோலத்தோடும
பெருகொளிபிறங்கநின்றான்பெருமையார்புகலவல்லார். (௩௱௪)

கண்டனர்முனிவரெல்லாங்கரஞ்சிரமீதுகூப்பித்
தெண்டனிட்டடியில்வீழ்ந்தெழுந்தெரிசித்துப்பணிந்துபோற்றிக்
கொண்டபேரன்பினோடுங்குழுமினாவலஞ்செயத்தேத்தித
தண்டவெண்பிறையினானைத்தோத்திரம்பலவுஞ்சொலவார். (௩௱௫)

பொதியம்வாழ்குறியகும்பன்போற்றிடநாளுநெல்லைப
பதியினிலினிதுமேவும்பரமனேபவளமேயோபாசா
மதியணிசடையாயகோடிமன்மதரூபமாயெம
மெதிருறவந்துதோன்றுமேகநாயகனேபோற்றி. [௩௱௬]

விண்புகழ்திருநெல்வேலிவீதியின்மகரயாழின்
பண்பகரிசையின்மிக்கபாடிசையொலியும்பணையும்
கண்கவாவனபினோடுங்கங்காளவேடமாகிப்
பெண்களைமயல்செய்விக்கும்பிஞ்ஞகாபிரானேபோற்றி. [௩௱௭]

பழமறைபகரும்வேதன்பசியமால்பண்டோர்காலந்
தொழுதுனதருளாற்கொன்றைசூழ்ந்தபொன்முடியுந்தாளும்
விழைவுறுமனத்தராகிவிண்ணொடுமண்ணுந்தேடத்
தழலுருவாகநின்றதற்பராசிவனேபோற்றி. [௩௱௮]

சூலகபாலமேந்தித்துடியொடுவீணையேந்திப
பால்வெண்ணீறுபூசிப்பட்டொளியழகினோடு
சாலிசூழ்திருநெல்வேலித்தாருகாவனத்திலவந்து
வால்வளைமகளிர்தம்மைமயல்செயயும்வரதாபோற்றி. (௩௱௯]

சங்கராவேணுநாதாதாருகாவனத்தில்வேத
மங்கையர்கேசபாரமாலைகளாவிளங்குபாத
பங்கயப்பரனேயன்றோர்பரிவுடனுளஞ்சிந்தித்துச்
செங்கையாலருச்சித்தேத்துஞ்சிவபெருமானேபோற்றி. (௩௱௰)

மந்திரந்துடியதாகவளர்மகத்தீயையேந்திச்
சுந்தரப்புலியைச்சூழ்ந்துதோன்றுமான்மழுவைத்தாங்கி
வெந்திறன்முயலகன்மெய்மிதித்துடனடனஞ்செய்தாய்
சுந்தரற்குத்தூதாகண்ணுதற்பரனேபோற்றி. [௩௱௰௧]

சுருதிதோனந்தகோடிசூரியப்ரகாசமான
கிரீடமுந்தரித்துமார்பிறகிளரொளிபபதக்கம்பூண்டே
திரமுறமபையநல்குஞ்செங்கையிற்செங்கோலேந்தி
யரியபேருலகமெல்லாமரசுசெய்பரனேபோற்றி. (௩க௩)

விடம்பயில்களமும்வெய்யவிழிபயில்நுளமுமங்கை
யிடம்பயிலிடமுங்கொண்டவிறைவனேயிமையோரோடு
தடம்புயினைத்துங்காணததாம்பிரசபையினின்று
நடம்புரிதேவதேவநம்பனேபோற்றிபோற்றி. (௩க௩)

என்றுதோத்திரங்கள்செய்தேயிணையடிபணிந்துபோற்றித்
துன்றுமெய்புளகங்கொள்ளதூயகண்ணருவிசோர
நின்றனராடிபபாடிநிரந்தராநிமலாநித்தா
னனெறமககருளவாயென்றுநலம்பெறததொழுதுபோற்றி. (௩கச)

முனிவரிவ்வாறுசொல்லமுதல்வனு தனைககேளா
கனிமிகுகருணைகூர்ந்துநல்லதிவுடனமெயஞ்ஞான
மினிதருளசெய்துமிக்கவெழிலபெ முருவஙகாட்டித்
தனகராகோடிகோடிதிகழொளிபிறங்கநினறுா. [௩க௫)

மற்றுநன்முனிவொல்லாம்வரதனாருண்மெய்ஞ்ஞானம்
பெறறனரினிதானநதபபெருங்கடனமூழகினாபோ
லுற்றனரமலன்றனனையொருபபடககண்ணிறகணடார்
பறறுடைமனததராகிபபதமலாபணிந்துசொலவார். (௩கசு]

அருடருபரனேநீதானுயிரகோடியாகும்
பருதியின்னுளிரசொருபஙகாட்டிடப்பயஙகொண்டோமாற்
கருணைநாயகனேதூயகயிலையிலிருககுஙகோலம
பனையொருபாகாயாஙகளபாரததிடவருளசெயவாயே. [௩கள)

வேறு

கூறியமாதவர்கோவொடுமணமும்
பேறிதுவென்றுகளிப்பதுபெறவே
யாறிருதோண்மகவனனையோடய்ய
னேறிடையேறியிசைநதெதிராநினறான். (௩கஅ)

கண்டனர்மாதவர்கைதலைமீது
கொண்டனராடினர்பாடினர்குனித்தார்
தெண்டிசைவிடறுகாசிவபெருமானைப்
பண்டருமறைமொழிகொடுதுதிபகர்வார். [௩க௯)

இந்தமெய்யுருவமெமக்கருள்செய்தாய்
வந்தனைசெய்திடவந்தெதிர்நின்றாய்
கந்தனையைந்துகரத்தனையன்பாய்த்
தந்தருளிரசதசயிலாசரணம். (௩௨௰)

வேளையெரித்தருள்விமலாசரணம்
பாளைநறுங்குழலபாகாசரணங்
காளமிருந்தொளிர்கண்டாசரணங்
கோளரவம்புனைகுழகாசரணம். (௩௨௧)

புரமெரிநகைபுரிபுனிதாசரணம்
விரைமலரிதழியிலைந்தாய்சரண
மரியயனறிவருமரசேசரணம்
வரைவனநாயகவரதாசரணம். (௩௨௨)

கைதவமொடுசிறுவிதிகதிபெறவே
செய்திடுவேள்விசிதைத்தாயசரண
மைம்முகிலெனவருமறலிமெய்பதறி
நைவுறவுதைசெய்தநாதாசரணம். (௩௨௩)

அத்தியினுரியினையணிவாய்சரணஞ்
சத்தியமறைநெறிதருவாயசரண
நித்தமுமனதிடைநினையுநன்னெறியோர்
முத்தியையுறவருண்முதலவாசரணம். (௩௨௪)

வேறு.

சங்கரனேநெல்வேலித்தாணுவேநின்பெருமை
பங்கயமேலினிதிருக்கும்பண்ணவனுமறியானுற
றுங்கமுறுமாயவலைதொடரிலகப்பட்டுழலு
மெங்களறிவினிலுணர்ந்தேயியம்புவதற்கெளிதாமோ. (௩௨௫)

சிறுமையினேமறியாமற்செய்தபிழையதனையு
மறியுடையகரத்தானேமனங்கொளாதருள்புரிந்து
நெறியுறுமுன்பதத்தோடுநிலைபெறவைத்தருளெனவே
வெறிமலர்ப்பொற்பாதமிசைவேதியர்கள்வீழ்ந்தனரால். (௩௨௬)

இன்னவகைதோத்திரங்களெடுத்தியம்பிநறுங்கமலப்
பொன்னடியில்வீழ்ந்தெழுந்துபோற்றியெதிர்நின்றிடலுங்
கன்னியொருபாகனந்தக்கடவுண்முனிவரைநோக்கி
மன்னுமுமதுளமகிழும்வரமதுகேண்மெனமொழிந்தான். (௩௨௭)

வரதனிவைபுகன்றிடலுமாதவர்களுரைசெய்வார்
பரமனேயெங்கோவேபண்ணவனேசிற்பரனே

கருணையொடுமித்தாருகாவனத்திற்கங்காள
வுருவினொடும்வடிவுடையாளொடுமிருக்கவேண்டுமால். (௯௨௮)

கருது திருநெல்வேலிக்கங்காளகோலமன்பாய்த்
தெரிசிப்போர்பவமகன்றுசிவனேமெய்ப்பலங்கொடுக்கும்
பொருளெனவேமனநினையும்புத்தியுமுண்டாயவர்கள்
பெருகொளிசேர்கயிலாயபடேறினிதுபெறவேண்டும். (௯௨௯)

இன்னவரமெமக்கருளுமெனமுனிவரிறுகேட்பப்
பன்னகமெய்ப்பணியானப்படியாகுமெனப்பகர்ந்தே
தனனிகரிற்றிருமூலத்தானருக்குமேலபுறத்திற்
கொனனுலவுகங்காளககோலமொடுநின்றருளி. (௯௩௰)

மின்புரைசெஞ்சடையீர்யாம்விளம்புவதுகேளுமென்றே
யின்பமுறுகருணையொடுமிருந்தவரையபாரத்துலைப்பார்
மன்பதையிறபெண்ணுருவமாறுமைடாள்பங்காகு
மனபுறுநம்பங்காகுமாணுருவமத்தனையும். (௯௩௧)

ஆதலாலெவாகளையுமாநதையதுபுரியாாகள
சாதியாலிகழார்கட்டருகதியைசசார்வாாகள்
காதுகளமிருகரங்கள்கண்டிலகபொனலேடணிநது
பூதிமெயயிறபுனைவோர்கள்புணணியரெம்மடியவரே. (௯௩௨)

இததகையகண்டிகையுமிலகுவிபூதியுமணிநது
பததியொடுசிவபூசைபணணுவோாபவநதொலைததே
சித்திதருமெயபபதமுஞ்சேர்நதுநமதருபபெறுவார்
முசசருறுபேரினபமுததியதுபெறுவாரே. (௯௩௩)

செம்மைபெறுமடியவரைச்சிநதிப்போர்தினநதுதிப்போ
ரெம்மையருச்சனைபுரியுமின்பநலம்பெறுவாாக
டம்மனதிலிகழுவோர்சநதிரசூரியாவரைகரும்
வெம்மையுறுநரகினிடைவீழநதுபாதவிப்பாரால். (௯௩௪)

இநதவகையறிவிததோமினிநீவிரெமைத்தினமும்
வநதனைசெய்திடுபூசைவழுவாமலியற்றியே
சிநதையினிலெமைநினைகருநதேசிகருக்கமுதளித்துப்
பநதவினைப்பவநதொலைநதுபரகதியைப்பெறுவீரால். (௯௩௫)

மற்றுமிநதநெல்வேலிவளர்தாருவனப்பெருமை
சொற்றிடினான்முகனுமநதச்சுருதிகளுஞ்சொலவரிதா
முற்றசித்தித்தலமிதனிலுறையிலிங்கமாசாசம்.
பெற்றிடுமெவ்வடிவாளும்பேரின்பங்கொடுப்பதுவாம். (௯௩௬)

வடிவுடையநாயகியும்வயங்குமொளிவடிவாகும்
படியில்வருகம்பைநதிப்பாங்கின்மணிக்குகையில்வந்தே

நெடிதுதவம்புரிந்தமணாகிலைறவேற்றிசித்தியமு
மடியர்புகழ்ந்தினிதேத்தியடிபணியவீற்றிருந்தாள். (௧௧௭)

முத்திதருமறறுமுள்ளமூர்த்திகளுமவ்வகையாம்
மத்தகையவடிவமுமக்கறியவத்துகாட்டினேம்
வித்தகரான்மறையுமிந்தவிதம்புகலுமாகையினுற
பத்தியொடுதெரிசிப்போர்பரகதியைப்பெறுவாரால். (௧௧௮)

ஆதரவினுமக்குநாமறிவித்தவிலிங்கமதில்
வேதன்முதலாமெவருவிரும்பிவந்துதோன்றுவதாம்
பூதலத்திலிவ்விலிங்கம்போலிலையாமெனப்புகன்று
காதலொடுந்திருமூலலிங்கத்தைக்காண்பித்தார் (௧௧௯)

தெள்ளமுதைமெய்ஞ்ஞானசிவகக்கொழுந்தைச்சிறபரனை
புள்ளிமறிமழுவேந்துபுங்கவனைப்புண்ணியனை
யொள்ளிரவிபலகோடியுதையமொருங்கிருந்ததெனப்
பள்ளமதிலிருந்தொளிருமப்பண்ணவனைக்கண்டார்கள். (௧௨௦)

பார்த்துடலம்பரவசமாய்ப்பன்முறைநற்றுதிபுகன்றே
யார்த்தனர்கடொழுதனர்களரகரவெனமொழிந்தார்
சேர்த்தனர்செங்கரமிரண்டுஞ்சென்னியின்மேலிருவிழிநீர்
போர்த்தனர்தம்முடன்முழுதும்புளகமுறப்புகழ்முனிவர். (௧௨௧)

விரைமணிகளணிகும்பநிறைவாசநீராட்டித்
திருவமுதுநைவேதயஞ்செய்தூநறுந்தீபங்கள்
கருதிமிகப்பணிமாறிக்கைகூப்பித்தொழுதேத்தி
மருமலராலருச்சனைகள்வழிபாட்டின்முறைசெய்தார். (௧௨௨)

இவ்வகைதான்முனிவரர்களினிதுடனேயிறைஞ்சுதலுங்
கொவ்வைமணிப்பவளவிதழ்க்கோகனகத்திருவதன
நவ்விவிழித்தரளநகைநகிலமொளிர்கனகவரைச்
செவ்விமலைமகள்கொழுநனசிந்தைமகிழ்ந்திதுபுகல்வான். (௧௨௩)

நீங்கண்மகிழ்ந்தருச்சித்தநிதியமாமவ்விலிங்கம்
பாங்கினுறுமாவிடையாளுடனுதித்தபான்மையதா
மோங்குமிந்தத்திருமூலலிங்கத்தையுவப்பினொடுந்
தீங்ககலப்போற்றுவோர்சிவகதியைப்பெறுவாரால். (௧௨௪)

ஆதிலிங்கப்பெருமையையுமன்புடனீர்காண்பீரா
னீதிதருமவ்விலிங்கந்தனையுநித்தமுந்தொழுதே
காதலொடுமற்றுமுள்ளகங்காளகோலமுதற
பேதமெனம்முருவெல்லாம்பேணியடிபணிவீரால். (௧௨௫)

திருவளர்திருநெல்வேலிதெக்கணகயிலையிங்ஙன்
பொருவலாப்புனிதஞானபோதமுமுதவுமாகருங்
கருதுவதரிதகோரகங்காளக்கோலந்தனை
யருகுறமினருபாரொனறந்தநலவடிவுகொணடான. (௩௫௫)

வேறு

வரியமைவறுகிளமதியிதழிவனமணிசிரமிசைபலகோடி
யரிதலைமாலையுநாலுமுகததவாதலைமாலையுமணிவைப
பரிமளமிாகமதமணவைவீசபபாறுபலசோடிசருமமுடையனை
திருவழகொள்மொடுதறுவிலககதிகழநதலையிறுமிலகுமரிபலக. [௩௫௬]

மநதிரமறைமொழிபவளமணிவாயிடைகுறுநகைசநிலவலரச
சநதிராபலபலகோடியொருசநதிரனெனவானனமமைச
சுநதரவளையணிகுழையிடைகாகோதரமுணடமைகுகழச
கநதமமொளிாகறைவிடமிலககககவினொழுகியபுயவரையிலக. (௩௫௭)

மாாபிலணிபணிமாலைகளுமல்லிகைமாலையுமலரிசுழிச
தாரணிமாலைபிறுடனிலைகசதருகரமிசைமழுமானிலக
வாருமெயபதரியுளஞசடைவெயதியகாலாசனினிநபமொடுஞ
சோாவிலபலலாயிரவணடமெலலாநதொதமயிாறுனிதொழமேதுவள. [௩௫௮]

திருவரையிடைதருமாலயனுராகுமெழுாளிசருமெனபதுகுலவக
கரியுரியணிசருபுரமிலககககவினுறுமரவகஙகணமிலக
மருவுறுதவமுன்வராவெளவிவருமுயலகனுடனெறுநறெனத
தருநடமதுபுரிதருசரணதாமரையழகொளதானிலக. (௩௫௯)

மணிபுனையரையிடைபடமொழியுமவயிரவகோலமதிலகநெடும்
பணிபலகோடிகணமேனியெலாமபலபலவணியுடனிலகிடவே
யணிதிருசூலமுபலமொடுமேநிகரைவாழகணைகரமிலக
கணமுறுபூதாகளபடைதுமழககததருபலமறைமுடிவலவர (௩௬௰)

திருநுதனமீதுவெணணீறிலகுதகிருமானமுமுவெனபதுசூலக
கரமிசைதிகழவாகாரமுறுகஙகாளவயிரவகோலமொடும
பரனுமைவடிவுடையவளபாகனபரிவொடுகுலவுறுதிருவழகை
யிருவிழிகளிகொளநெடுமாயனிதையமுமகிழதரவெதிாகணடான். (௩௬௧)

கரியவனிருவிழிபுனலவாரக்கரமலாமணிமுடிமிசைகுவியப
பாவசமுறவுடலபுளகமுறபபரிவொடுபலமுறையடிபோறறிச
திரிபுரமெரிசெயதநகையானைததினகரனமதியழலவிழியானைச
சுருதிகளறிவருஞசுடரோனைததொழுதனனமகிழவொடுதுதிசெயதான் [௩௬௨]

அலகிலபலபூதாகளாடிடவேயாடியதாமரையாய்சரண
நிலவியபலபலவண்டமெலாநிறைதருபுரமுடையாய்சரணம்

கொலைவிடமதுநுகர்பெருமானேகுறைமதிபுனைகுழகாசரண
முலகினைநலிவுசெய்புரமெரியவொளிநகைபுரியரனேசரணம். [௩௬௩)

மாரனைநுதல்விழியாலெரிசெய்மான்மழுவுடையவனேசரண
மீரவெணமதிபுனைவேணியனேயிமையவர்தொழுமரசேசரணம்
பாரமுறுகனகமேருவிலாயபழமறைபரியுடையாயசரணஞ்
சீரபெறுமிதழிகலாமதிசூழதிகிரிவனத்துறைவாயசரணம். (௩௬௪)

ஏனமதாகிமுன்னெளியேனுமெழில்பெறுதாமரையுறைவோனும்
வானிலநேடியுமறியாதமலரடிமுடியிவைகண்டேறல்
ஞானபராபரநாதசடாடவிநாயசுபூரணசமபானே
கானலர்குழலுமையொருபாகாகழைவனமுழுமுதலேசரணம். (௩௬௫)

இன்னணமுயர்துதிமால்புகலவிறைவனுமவனமர்வுறவருளி
முன்னுறுதருவனவிருடிகளைமுடிவிலைமமுருவிதயாருமென
வன்னவர்தாமுமவவுருவதனையாதரவுடனோக்கண்டனே
துன்னினர்கரமலரதுதூவிதொழுதனர்துதிபலபலசொலவார. (௩௬௬]

வேறு

அமலனைகருணையானேயரவணிசடையினனை
விமலனைவிடத்தையுண்டவண்ணலைக்கழுமீசனை
நிமலனைநெல்லைநாதானந்தனையடியாருள்ளக
கமலமீதிருக்குந்தேவகணத்தறப்பொருளைப்போற்றி. (௩௬௭)

என்றுதோத்திரங்களசெய்தேயிருடிகளனைவருமாங்கு
நின்றனரடியவொல்லாநேசமோடிறைஞ்சிப்போற்றிக்
கொன்றைசூடிறைவாநெல்லைக்கொற்றவாகுழகாநம்பா
துன்றுகங்காளநாதாவென்றுதோத்திரங்களசெய்தார். [௩௬௮)

பொருவிலாததேவர்சிந்தூரந்துறைதனினீராடி
மருமணங்கமழும்பொற்றுருமனைகருமாரிசூழ்ந்து
திருவடிவாளைப்போற்றித்திருமூலலிங்கம்போற்றி
யருமறைபரவுமாதிலிங்கத்தையருச்சித்தேத்தி. (௩௬௯]

தருமனவரதத்தாண்டநாயகர்சரணம்போற்றிக்
கருமணிகளத்தாராங்கங்காளநாயகனைப்போற்றி
யிருநிலம்புரக்கச்செங்கோலோச்சுமென்னரசேயென்று
சுருதிகளுணருந்தேவைத்தோத்திரம்பலவுஞ்சொன்னார். (௩௭௰)

மங்கையோர்பாகாநெல்லைவரதனேமழுவலானே
கங்கைசூடிறைவாவேள்விக்கனலேந்துகரத்தினானே
பங்கயனெடுமால்காணப்பரமனேபணிமெய்யானே
கொங்கலர்கொன்றைசூடுங்குழகனேபோற்றிபோற்றி. [௩௭௧)

பத்தியின்வழிபட்டேத்தும்பண்புறுமடியார்தங்கள்
சித்தமீதிருக்குந்தேவேசிவபெருமானேகொன்றை
மத்தமோடெருக்கமாலைவிரிபிறையுஞ்சூடு
மத்தனேயெம்மையாளுமமலனேபோற்றிபோற்றி. (௩௭௨)

மலைமகளுனதுகண்ணைமறைத்திடவந்தகுற்றந்
தொலையவேயம்மைபூசைபண்ணெனத்தூயவாக்கா
லிலைபெறமொழிந்தேலோடுநெல்லைமாநகரில்வந்து
கலைபுகலறங்களசெய்யக்கருணைசெய்தவனேபோற்றி. (௩௭௩)

அஞ்சனவண்ணன்முன்னாளலாயிழிகசமலஞ்சாதித்
தஞ்சமென்றினிதுபோற்றச்சக்கரங்கொடுத்தாய்போற்றி
வஞ்சகாபுரங்கண்மூன்றுமணிநகைமூரலகாட்டி
யெஞ்சிடவெரித்தநெல்லையிறைவனேபோற்றிபோற்றி. (௩௭௪)

இன்னவாறயன்மான்மற்றுமிந்திராதிவிண்ணோரெல்லாம்
பொன்னடிபணிந்துபோற்றிப்புகழ்ந்துநின்றுருகக்கூற
வன்னவர்தம்மைநோக்கியருள்செய்தவராங்கணீங்கள்
சொன்னதுதருவோமென்னத்தூயவர்தொழுதுசொல்வார். (௩௭௫)

அய்யனேயகோரகங்காளக்கோலத்தழற்சோதத
மெய்யினைநோக்குந்தோறும்வெருவுளமஞ்சுகின்றோம்
செய்யவிக்கோலந்தன்னைத்திருமூலத்தானமான
துய்யபேரொளியினோடுதுலங்கவேயருளவேண்டும். (௩௭௬)

வேதியர்விண்ணோர்மற்றவித்தகாவிரும்புநாகர்
பூதலத்துள்ளோர்யாரும்புனிதனேயுன்னைப்போற்றிப்
பாதமதருச்சித்தேத்திப்பாக்கியம்பெறவுநல்கி
காதனேதிருநெல்வேலிநகரினிலிருக்கவேண்டும். (௩௭௭)

இன்னநல்வரங்கணல்கவேண்டுமெனறிறைஞ்சிக்கூற
முன்னவன்கருணைகூர்ந்துமூரலசெய்தவரைநோக்கி
மன்னுமவ்வரங்கடந்தோமெனமகாலிங்கந்தன்னி
லன்னநல்லுருவங்காட்டியருளவயிரவரோயானார். (௩௭௮)

சூலகபாலமேந்திச்சோதிநலவடிவமாகிப்
பாலவெண்ணீறுபூசிப்படர்சடைபரிந்துதோன்றச்
சீலநற்கதைகைக்கொண்டுதிகழுமுக்கண்ணும்பூத்து
வாலனும்வடுகனாகிவடகீழ்மூலைநின்றன. (௩௭௯)

வந்துதானியாவரேனும்வயிரவநாதர்தம்மைச்
சிந்தையினபோடுசூழ்ந்துசேவைசெய்திடுவோரெல்லாம்
பந்தமாம்வினைகணீக்கிப்பார்தனிற்செல்வமெய்திக்
கந்தரங்கறுத்தநாதன்கயிலையிலிருப்பர்மாதோ. (௩௮௰)

மன்னியேயவளர்கங்காளவயிரவதிர்த்தமாகுஞ்
சன்னிதிக்கூவதிர்த்தநதனினமூழ்கிறபேய்கள்பூத
மந்நிலைதான்விட்டோடியஞ்சிமெய்பதறியாடுங்
கனனியர்புருடர்வந்துகருதியவரங்கைகூடும். [௩௮௧]

வாய்மடித்ததட்டிவந்துவயிரவகணங்கள்சீறிப்
பேய்பிடித்தோர்கடம்மைப்பின்கட்டாய்க்கட்டித்தூக்கிக்
காயமுநதலைகீழாக்கிக்கதையினாலடித்தலோடு
மோய்விலாதலறிக்கூப்பிட்டோடுமேபேய்களெல்லாம். [௩௮௨]

மற்றுமக்கணங்கள்பாரில்வலியமெய்ப்பூதநதன்னைச்
சுற்றுவர்தண்டால்வானிறசுழறறியேயெறிவாரன்னோர்
பெற்றபேர்கேட்டபோதும்பேயெலாமோடிப்போமா
லுறறிடுபில்லியோடும்பிரமததிதானுமோடும். [௩௮௩]

இங்கிவர்பேய்விட்டோடவெழுந்துமுன்போலவந்து
துங்கமெய்வடுகநாதர்துணையடிபணிர துபோறறி
யங்கையாலருச்சிததேத்திடன்புறுந திகளசெய்து
தஙகளபொனமனையிலெய்திததகவுடனிருபபாமனனே. (௩௮௪)

வானவர்போறறுகெல்லைவயிரவநாதர்தம்மை
டானநற்பூசைசெய்தேயஞ்சுநாளேழுநாளிற்
றூனுயர்தவங்கிடந்துதலவாசம்பண்ணுவார்கண்
மேன்மையாஙகதிவீட்டின்பமேவிவீறறிருப்பாமாதோ. (௩௮௫)

கவருடைச்சூலமேநதுங்கங்காளவடுகநாத
ரவிர்மணிக்கோயிறபினனராம்வன்னிமரமதுண்டாஞ்
சிவனுருவாகுமநததிருவன்னிநீழலவைகிப
புவனங்களுண்டுபண்ணிபபுரநதனாபுனிதனோ. [௩௮௬]

இத்திருவன்னிக்கன்பாயெடுததுநீாவிடுததுநாளும்
பத்தியிறபூசைதீபாராதனைபண்ணவேண்டு
மததருபபனைகாய்பனனமவையுலாநதழியுங்கால
மததிமமாகும்வையமாதுயருழககுமன்றே. (௩௮௭]

ஆதலாலநதவன்னியழிவிலாதிருக்கச்செய்தாற்
பூதலமினிதுவாழும்போறறுவோர்கதியைச்சேர்வார்
தீதிலம்மரத்தினீழல்சிவனுபதேசஞ்செய்தான்
காதுவெவ்வினைதீர்தாருகாவனமுனிவாகளெல்லாம். [௩௮௮)

ஆயதோர்காலமாயனயன்விண்ணோரிவர்களெல்லா
நாயகனடியிற்றாழ்நதுநம்பனேநாங்கள்காணத்

தாய்வடிவுடையாள்போற்றத்தாம்பிரசபையினின்று
தூயதாண்டவஞ்செய்யவேண்டுமென்றிரந்துசொன்னார். (௯)

கன்றெனமகிழ்ந்துநெல்லைநாதனங்கவர்கட்கன்பாய்
மன்றினிலாடவெண்ணிவருமுயலகனைமேனி
கன்றிடமிதித்தான்மிக்ககங்காளகோலத்தோடு
நின்றுமறறெவருங்காணநிருத்தமேசெய்தானித்தன். (௧௰)

முயலகனெழும்புதோறுமுதல்வனுங்குனித்தேயாட
வயனுறுமண்டகோடியசைந்தசைந்துடனேயாட
மயலறத்தேவர்நாகர்மாலயன்முதலோர்சேவை
யியல்பெறச்செய்தார்நாதனினியநல்லருள்செய்தானால். (௧௧)

மற்றுமிவ்வண்டமெல்லாமசைந்திடுமாறுகண்டு
நற்றவக்குறியகும்பனாரதன்முதலோர்விண்ணோ
ருற்றபேரன்பினோடுமுலகெலாமளித்தோன்மாயன்
சுற்றுறநின்றுபோதுமெனத்துதிசெய்துவேண்ட (௧௨)

காயகண்டனநீங்கிநாறுநதல்வடிவினோடுந
தூயகங்காளருபததோடுமகங்கேகியந்த
மேயதோர்மூலலிங்கமேல்புறமாகவெங்கோ
னேயபொனமணிசேர்சிங்காசனததிடையிருந்தான்மன்னோ (௧௩)

அரியயனமரர்மற்றவருந்தவரிவர்கட்கெல்லாந்
திருவருள்செய்தனனோர்களசேரிடமதனிறபோக்கிக்
கருதுமெய்யடியார்க்கன்பாய்க்கருணைகூர்ந்துதவிசெயதே
மருவியதிருநெல்வேலிவளம்பெறவிருந்தானமனனோ (௧௪)

சங்கரனினிதுவாழுந்தாருகாவனத்தில்வந்து
கங்காளருபநதனனைககருத்துடனறெரிசிபபோர்க
ளிங்குளசெல்வமெல்லாமியலபுடனெய்திபபின்னர்
தங்கநற்குணங்களாகத்தூயநற்கயிலைசேர்வார். (௧௫)

சிந்துபூந்துறைநீராடித்திருமூலந்தானர்தம்மைச்
சுந்தரமகாலிங்கத்தைத்தூயநல்வடிவையலபாய
வந்துமுன்னருச்சித்தேததிவழிபடுமனபர்தாமே
யெந்தைபொன்னடியிலென்றுமினிதுடனிருந்துவாழ்வார் (௧௬)

பாரிடத்தொடுவெங்காளிபகர்வயிரவனார்துற்கை
கார்நிறக்கடல்வண்ணனதார்கரும்பனைவீராதி
சேர்வருமிவர்களெல்லாநெல்லைமாநகரைக்காக்க
வாரணமுரித்தநாதனமகிழ்ந்தினிதிருந்தான்மன்னோ. (௧௭)

பகருமாண்மறைகள்வல்லபண்ணவர்கேண்மின்மேலுட்
டுகளொரீஇத்தேர்ந்தைசொன்னசொல்லையான்சொல்லுகினறே

னிகரிலலாத்தில்லைக்கூத்தநெல்லைகங்காளங்காண்போர்
திகழ்பரகதியைச்சேர்வார்சிவனுணையிதுமெய்யாமே. [௧௰௮]

வளர்தருவனத்தில்வாழுமாதவர்பன்னிமாரை
யுளமயல்செய்யவந்தேயுற்றகங்காளகோலங்
களிமகிழ்வொடுமேசேவைசெய்திடாக்கயவர்தாமே
கிளர்பவக்கடலிலாழ்ந்துகிளர்நிடாநரகில்வீழ்வார். (௧௰௯)

இவ்வகையறிந்தேநாளுமிமையவர்மனிதரெல்லாங்
கவ்வையதகற்றுநெல்லைக்கங்காளகோலந்தன்னைச்
செவ்வையினின்றுபோற்றித்தெரிசிப்பார்நீவிர்தாமு
மவ்வணிநகரிற்சென்றேயமலனைச்சேவிப்பீரால். (௨௰)

என்றிந்தவாறுசூதனியம்பிடமுனிவர்கேட்டு
நன்றெனமகிழ்ந்தேநெல்லைநம்பனாரருளைப்போற்றி.
கொன்றைவேணியனார்காதைகூறியசூதன்றன்னை
யென்றுநீவாழியென்றேயியம்பினராசிசொன்னார். (௨௰௧)

கோதறுகலவிச்சூதன்குழகனார்கதையைக்கேட்டு
மாதவர்க்குரைபபாணிந்தவளாதருவனத்துமாதர்
காதல்கொண்டிடவேவந்தகங்காளநாதனெங்கோ
னுதியான்காதையெல்லாமறிந்தவாறுரைத்தோமென்றான். (௨௰௨)

என்னலுமுனிவர்சொல்வாரிறைவன்கங்காளக்கோல
மனனுறுதேவதாருவனத்துநற்சரிதையெல்லாஞ்
சொன்னதுகேட்டியாங்கள்சோகவெந்துயரந்தீர்ந்தோந்
தனனிகரிலலாச்சூதமுனிவனேதகவுளானே. [௨௰௩)

சொல்லியவார்த்தைகேட்டுச்சூதமாமுனிவன்சொல்வா
னல்லியலாகுமிந்தக்காதையைநயந்துகேட்போ
ரொல்லையிலெழுதுவோர்களுவந்துடனபடிப்போர்தாமு
மெல்லையிலின்பமெய்தியிறைவனார்பததலைச்சேர்வார். [௨௰௪]

சூதனிவ்வாறுசொல்லத்தூயநன்முனிவர்சொல்வார்
நாதனார்திருநெல்வேலிநகரினேழ்முனிவர்வந்து
காதலினியபேறுபெற்றிடுகாதைதன்னை
யோதெனமகிழ்ந்துகேட்பவுயர்மறைச்சூதன்சொல்வான். (௨௰௫)

தாருகாவனச்சருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—௧௲௨௰௧௱௮

## சத்தவிருடிகள்கலியுகத்துக்கஞ்சிவந்துபேறுபெற்றசருக்கம்

ஆதியின்முன்னோர்காலமளவிலாவுகங்கள்செல்லப்
பூதலம்விளங்கப்பின்னும்பொருந்தியவுகங்களனகிற்
பேதமில்லுகங்கண்மூன்றும்பேரவேபின்புவந்த
நீதியில்கலியுகத்தினெறிமுறைதிறம்புங்காலை (௧)

கருதியவசிட்டனத்ரிகாசிபன்பரத்துவாச
னரியகோதமன்சமதக்கினியங்கிராவோடேழ்பேர்
வருபுலத்தியன்மெய்வாய்மைக்கோசிகனவாமதேவன்
பிருகுகண்ணுவன்கிருதுபெருமைசேர்புலகனேழ்வர் [௨]

இனியராமிவர்கள்சத்தவிருடியரிருபான்மைப்பேர்
சநகராதியர்களுல்வர்தம்முடனினிதுகூடித
தினமுநாம்புரிதவங்களசிததியாநதலமேதென்று
வனசமேலிருக்குநதேவைககேட்பதுமனத்திலெண்ணி (௩)

இலகுசெஞ்சடையினோர்களிருடிகளெழுநதுபொங்கி
நலமிகுமகிழ்வினோடுநம்பனைநினைநதுபோற்றிக்
குலவுபொன்வரைமேனமிககொடுமுடியிடததிலென்று
மலரயனிருநதுவாழுமனோபதிநகரினவநதார. (௪)

மன்னுபொன்மேடைகோடிமாளிகைகோடிவானிற்
றுன்னுகோபுரங்களகோடிதூவிகளகோடிதோரணறங
கன்னிமாமதிளசூழகோயிறகடவுளர்தினமுமபோறறு
மந்நகர்ப்பெருமையெம்மாலறையலாநதகைமைததனறால். (௫)

இநதமாநகரிலென்றுமினபமாயவிஞ்சைமாதா
கநதிருவர்கடம்மாதர்கருதுவீணைகளவாசிபபச்
சிநதையன்போடுதேவாசேவடியிறைஞ்சிபபோறற
மந்திரமறைகளெல்லாம்வணஙகிததோத்திரங்களசெயய. (௬)

அரிவையரரம்பைமாதராடினாகிதம்பாட
விருதுமுனகூறிநின்றுவேத்திரர்பலரும்போற்றக்
கருதுதம்மடியாரெல்லாங்கனிநதுளமகிழநதுபோற்ற
விருடிகளெண்ணிலார்களிணையடியிறைஞ்சிபபோற்ற. (௭)

ஏர்பெறுகலைகள்போற்றவெக்கியம்பலவும்போறற
வாருமோதிமங்கள்பூண்டவவிரமணிவிமானததூடு
பாரதியோடுகாயத்திரியிருபாலும்வைக
வேரியங்கமலபபோதின்மீதுவீறறிருந்தான்வேதன். (௮)

இன்னதோர்காலைசத்தவிருடியரெவரும்வந்து
பொன்னடிபணிந்துபோற்றிபபோதனைவலங்கொண்டெய்தி

முன்னுறமகிழ்ந்துநின்றுமூறைமுறையருச்சித்தேத்தித்
துன்னினரொவருமன்பாய்த்தோத்திரம்புகலலுற்றார். ௫௯

நான்முகப்பரனேவேதாரயனமெட்டுடையநாதா
தேனமொழிமாதுகாயத்திரிசரசுவதிகேள்வா
கானிவர்வனசமாலைககவினொளிர்முநூனமாாபா
வானவாமுனிவர்யாரும்வணங்குபொறபாதாபோறறி. ௬0

உலகெலாமளித்துக்காக்குமொருவனேயுயிரகட்கெல்லா
நிலைபெறுதாதையாகநிலவுபேருடையநீதா
விலகுவெண்புயனேயனனமேறியகருணையானே
பலகலைமறைகளெலலாம்பகரும்பங்கயனேபோறறி. (௬௧)

வேறு

இனன வாறு துதிகளியம்பியே
முனனாநின்றுமுறைபணிநதேததலு
மன்னவர்தமையனபொடுநோககினன்
பனனுநானமறைப்பங்கயனகூறுவான். (௬௨)

சனகரோசத்தமாமுனிவோர்களே
யிஙகிதினமயிடைவநதெனசொனமெனப்
புனிதனேமலர்பபுங்கவனேகலி
தனதுபொயயுகமெயதிடசசார்நதனம். (௬௩)

சொன்னவாசகங்கேட்டயன்சொலலுவான
மனனுமிநதக்கலியுகமவநதபி
னெனனதாலஞ்சிவநததிராக்கத
ருன்னியும்மையுபாதிசெயதாாகளோ [௬௪)

மற்றும்ிவறிடையூறுகள்வந்ததோ
வுறறுவநததுரையுமென்றேறினன்
சறறுநதிமையிலாச்சததமாதவா
பற்பமீதுறுபண்ணவாககோதுவார். (௬௫)

படைக்குமேன்மைப்பதுமாசனத்தனே
கிடைக்குநெஞ்சக்கிலேசததிறனுன
தடைக்கலமென்றடைநதனம்யாமதைத்
துடைக்குமுண்மையைச்சொல்லெனச்செனல்லுவார் (௬௬)

கலியுகத்தினடக்கின்றகாரணந
தலமதெங்குந்தருமங்களுசமாய்
நிலையில்பாவங்களெங்குநிறைநததாற்
பலருஞ்சத்தியமின்றிப்பகருவார். (௬௭)

சத்தியமின்றித்தான்பகர்வோர்கடம்
புத்திபோகத்தைநாடிப்பொருந்தலா
லத்தர்முக்கணமலர்க்கன்பாகியே
முத்திசேருமுறையுமுயல்கிலார். (௰அ)

கோடைகாலங்குவலையமெங்கணும்
பாடுசெய்திடும்பானுவைப்போலவே
நீடுவெங்கலிநீதியெலாங்கொடுங்
கேடுசெய்யக்கிளர்ந்ததனீதியே. (௰௯)

பரிவுற்றந்தணர்பன்மறைச்சாத்திர
தருமநீதிதிறம்பிடச்சாற்றுவா
ரரசர்செம்பொனுக்காசைகொண்டாரையுங்
குரவர்தம்மையுங்கோறல்செயவிப்பரால். [௨௰]

சனங்கடத்தங்கருமந்தணந்தனர்
மனங்கொளாவகைவன்னமறந்தனர்
புனங்கொள்வேணியனபுண்ணியந்தேர்கிலார்
தினங்கடோறும்போயபயோகங்களசிந்திப்பார். (௨௧]

மேயகாமக்குரோதங்கண்மிஞ்சவே
மாயைமூடினர்வன்கொலைவஞ்சனை
நேயமோடிதுசெய்வர்நெறியிலா
ராயுமைந்தருக்கூட்டாதருந்துவார். (௨௨)

பாவமிஞ்சியெவர்களும்பண்ணலா
லாவதானவறங்களுமில்லையா
லேவரோனுஞ்சபையிலிருந்துநற்
றேவவேதவாத்துடணஞ்செபபுவார். [௨௩)

வேதமந்திரம்வேள்வியியற்றுவார்
சாதிசூத்திரர்சாத்திரஞ்செப்புவா
ரோதலாற்றமதுகொபயிலலையென்றுதா
வீதியந்தணர்தம்மையுநிந்திப்பார். [௨௪)

வேறு

சீலமின்றியேயந்தணர்சூத்திரர்செய்கை
போலியற்றுவர்சதுத்தருமுதல்வணம்போன்று
ராலமுண்டவரடியிணைநினைப்பவரில்லை
யேதுமற்றவரியாவர்க்குமிலைமனவிரக்கம். [௨௫)

சதுத்தராசனத்திருக்கவேதியர்கடாழ்ந்துடன்வாய்
புதைத்துப்பேசுவர்புகழுநற்றோத்திரம்புகல்வார்

விதித்தசாத்திரம்வேதங்களாகமம்விளம்பிக்
கதித்திடுங்கதிபெறுவகைமனத்திடைக்கருதார். (௨௯)

அருந்தமன்னத்தைவிலைகொடுப்போர்தமக்களிப்பார்
விரும்பியுண்டிடுநீராயுங்கிரையமாய்விற்பார்
திருந்துவிக்கிரகதறொடுசிவலிங்கம்விற்பார்
பொருந்துவேசையர்போகமேமலமெனப்புகல்வார். (௩௦)

தோற்றுமக்கலியுகத்தினிற்றுறக்கமார்பெறுவா
ராற்றருந்துயரவமிருத்தச்சரோயுண்டா
நீறறுமெய்யனைநிமலனைநிந்தனைபுகல்வார்.
போற்றுதொண்டரைவருத்துவர்நிந்தையும்புகல்வார். (௩௧)

கள்ளருந்துவர்காமத்தாற்பிறன்கடைகாண்பார்
பிள்ளையானதுதாயதந்தைவருந்தவேபேசுங்
கொள்ளையாடுவர்குடிகெடப்பேசுவார்கொடியோர்
வள்ளவார்குழைமாதரேதெய்வமாய்மதிப்பார். (௩௨)

இந்தவாறுறுந்துன்பத்தையெவாக்குநல்கிடவே
வந்ததாகுமிக்கலியுகவன்மையாதவிர்வார்
பந்தமாகுமிப்பவமெலாம்வருமெனப்பயந்து
சிந்தையஞ்சிநின்சேவடிதுணையெனச்சேர்ந்தோம். (௩௩)

ஆதவனவெயிற்குடைந்துவந்தடைந்தவர்கருளுஞ்
சீதநீழனச்செறிதருசெழுந்தருவெனனப்
பாதகக்கலிக்கடலுக்கோர்பாரதியெனன
வேதநாயகவெமக்கருள்செய்திடவேண்டும். (௩௪)

நித்தமும்பெறுவளமெலாநிறைந்திருப்பதுவாய்
முத்திநல்குவதாகிமுக்கண்ணனுக்கனபாயச்
சுத்தநீக்கியவசுத்தவெங்கலியினைத்துரத்திச
சித்திநல்குமத்தலமெவையெமக்கருள்செய்வாய். (௩௫)

இன்னவாறுயரிருடிகளினிதுடனியம்ப
மன்னுதாமரைமலருறைவேதியனமகிழ்ந்தே
கன்னலொன்றுளத்தொடுபலதலமெலாங்கருதித்
துன்னுநற்கதிதருதலமிதுவெனச்சொல்வான. (௩௬)

வேறு

மலர்தலையுலகின்மிக்கமலையவெற்பினுக்குக்கீழ்பாற்
பலகலைமுனிவர்தேவர்பரிவுடனினிதுபோற்றுந்
தலமதுசித்திமுத்தித்தானமாந்தலத்துக்கெல்லாந்
திலதமதாகுமென்றுஞ்சிவனுறைதிருநெல்வேலி. (௩௭)

அந்தமெய்த்தலத்தின்மூலலிங்கமோடாதிலிங்கஞ்
சுந்தரமாகநாளுஞ்சோதியாய்விளங்கித்தோன்று
மிந்துநன்னுதலாள்காந்திமதியெனுமிருப்பதாகு
மந்திரமறைகள்வேணுவனமெனவறைகுமாதோ. (௩௫)

தருமசேத்திரமாந்தாருகாவனமதுவேயாகும்
பெருமைசேர்காமக்கோட்டம்பிறங்குதெனகாஞ்சியாகும்
பொருவருமாநதியிற்சிறந்தபூந்துறைபுனிதமாகுந்
திருமகள்சிவனைப்பூசைசெய்பதிபுதலமுமாகும். (௩௬)

அந்தநற்றலத்தில்யானுமன்புறுபுகலவாதாமுங்
கந்தரங்கறுத்தநாதன்கமலத்தாளருச்சித்தேத்தி
யிந்தமெய்ப்பிரமப்பட்டமினிதுடன்மகிழ்ந்துபெற்றுப்
பந்தமாருயிர்களெல்லாம்பரிவுடனபடைக்கலுற்றேன். (௩௭)

மாயனுந்திருநெல்வேலிவரசனைப்பூசைசெய்து
நேயமோடினிதுபோற்றிநிலைபெறமகாரொல்லாம்
போயொழிந்திடவேகொன்றுபுகழொடுவலியும்பெற்றுன
மேயவிவ்வுலகமெல்லாமவிருப்புடனகாவல்பூண்டான். (௩௮)

காளியோடாடிவென்றகடவுளைத்தேவதாரு
நீளவன்முனிவர்செய்தநெறியிலாத்தவங்களமாய்த்தார
வாள்விழிவடிவைவந்தமணம்புரிந்தசெல்வமுன
னுளனவரத்தானநாயகராகிக்காத்தார. (௩௯)

தேசுறுவெள்ளிதானுந்திருமூலலிங்கநாதனைப்
பூசைசெய்தருச்சித்தேத்திப்பொன்னடிபணிந்துபோற்றிப்
பேசியமிருதசஞ்சீவினிபெற்றனசுராகக்கெல்லா
நேசமெய்க்குருவாயினனநெடுவிசும்பிருக்கின்றானல. (௪௰)

அந்தநெல்வேலிதன்னிலாக்யவக்கியரும்போந்து
சிந்தையன்போடுமிக்கசிவனைப்பூசனைகளசெய்தே
மந்திரமறைமெய்ஞ்ஞானம்வழுவிலாச்சாத்திரங்க
டந்திரமுறவேகற்றுதவம்பலசெய்துவாழ்ந்தார (௪௧)

தேவர்கடாமும்வந்துசிவனையேபூசைபண்ணிப்
பாவகம்பலவுஞ்செய்துபரகதியடைகின்றாராற்
பூவுறையயனமாலகோடிபுகலுருத்திரர்கள்கோடி
மேவியேபூசைசெய்துவிரும்புநற்கதியைப்பெற்றார். (௪௨)

ஆதலாலுருத்திரகோடித்தலமுமத்தலமேயாகுஞ்
சோதியாமூலலிங்கந்துணையடிபரவிச்சூழ்ந்து
மேதகுவிசுவாமித்ரர்விரும்பியேதினமும்போற்றி
நீதியோடருச்சித்தேத்திநித்தியப்பேறுபெற்றார். (௪௩)

வெம்மையில்குணத்துமிக்ககாசிபர்விரும்பியன்பா
லெம்மையும்வினையியாகமியற்றியெம்பிறையைப்போற்றி
யம்மைநல்வடிவாளென்னுன்கறஞ்செய்ததலத்தில்வைகிச்
செம்மைசேர்தவங்கள்செய்துதிகழ்வரம்பலவும்பெற்றார். [௪௪]

கோசுற்றமுனிவர்சூழக்குற்றமுனிபூசித்தேத்தி
வேதநலவேள்விசெய்துவிண்ணவாக்கவியுநல்கி
நாதனைக்கண்டுபோற்றிநலமிலாவசுராக்காகச்
சிதநீருததியுண்டுசீலமுந்தவமும்பெற்றான். (௪௫]

சித்தர்கிம்புருடர்யோகர்தேவர்தானவாகளெல்லாம்
பத்தியின்வந்துபூசைபண்ணிமெய்க்கதியைப்பெற்றார்
முத்தியைவிரும்பிச்செய்யுந்தவத்தினைமுயலுவோருக்
கத்தலம்போல்வேறுண்டோவருந்தவப்பெருமையோரே. [௪௬]

இத்தகைத்தவங்கள்செய்வோர்க்கின்சித்தியுந்தவலாலே
சித்தியாநதலமிதென்றுபெயருமாந்திருநெல்வேலி
யகத்தனைமூலலிங்கமாதியாமிலிங்கா்சனனை
நித்தமுமுவந்துபூசைசெய்பவாநிமலனுவார். (௪௭]

சனகாதிபரோசத்தமுனிவரோதவங்கள்செய்வோர்
மனமகிழ்ந்தொருநாளத்தத்தலத்திடைவைகினோரும்
தினமுமங்கிருப்போர்பூசைசெய்பவர்சென்னிப்போர்மாய்வோர்
கனவிலுநினைவோரினனோர்கணங்களாய்க்கயிலைசேர்வார். [௪௮]

ஆதலானீங்கடானுமத்தலமடைந்தன்பாகிச்
சிதநீர்ப்பொருநைமேவிச்சிந்துபூந்துறைநீராடி
நாதனைநெல்லைவாழுநம்பனைப்பணிந்துபோற்றப்
பாதகக்கதியைவென்றுபரகதியெடத்தலாமே. [௪௯)

முன்னுமத்தலத்திற்சென்றுமுதிர்தவஞ்சூறியகும்ப
னின்னவாறினியபூசையியற்றியேகலியைவென்று
னன்னவனுடனேநீங்களமலனையருச்சித்தேத்திற்
றுன்னுவெங்கலியைநீங்கித்தூயராயிருப்பீரென்றான். [௫௰)

புவனத்திலுயர்நெல்வேலிபோலொருதலமுமிலலைச்
சிவனைத்தற்பரனைஞானத்திருமூலலிங்கந்தன்னைப்
பவமுற்றுமறவேபூசைபண்ணினுற்பரமனுனை
தவசித்தியுங்கட்குண்டாஞ்சத்தியமீதுசொன்னோம். (௫௧)

இந்தவாறயனுர்சொல்லவிருடிகள்பணிந்துபோற்றிச்
சுந்தரவிடைகொண்டேகித்தூயநல்விமானமேறிக்

சுந்தரக்கறுத்தாதன்கமலத்தாணிணைந்துபோற்றி
யந்தரநெறியினேயவனியில்வந்தார்மன்னே. (௫௨)

வேறு

தரணிமீதினில்வந்துகேதாரமார்தலத்தை
யருகுகண்டனர்விமானம்விட்டிறங்கியேயன்பாய்ப்
பரவிமற்றுளதலங்களும்பார்த்துடன்போற்றிக்
கருதுவோர்க்கருள்காசிமாநகரினைக்கண்டார். (௫௩)

கங்கைமாநதியாடினர்காசிநாயகனை
மங்கையோடுமென்பாகவேபணிந்துளமகிழ்ந்தார்
திங்கள்சூடிறைதலமெலாமெங்கணுஞ்சென்றே
யங்கைகூப்பினர்தொழுதுகாவேரியையடைந்தார். (௫௪)

விரிதிரைக்கரம்பரப்புகாவேரியிலாடி
யிருமருங்கினுமுள்ளவெத்தலங்களுமேத்தித
தரையின்மற்றுளதலங்களுந்தகவினிற்போற்றி
மருவிவையைசூழ்மதுரைமாநகரினைக்கண்டார். (௫௫)

கண்டுமானம்விட்டிறங்கினர்கைசிரங்குவித்தார்
மண்டுநீர்வையையாடினர்நகர்வலம்வந்தார்
துண்டவெண்பிறைசூடியசுந்தரேசனையும்
புண்டரந்துதற்பூவைமீனாட்சியும்போற்றி. (௫௬)

புவியின்மற்றுளதலங்களும்புகழ்ந்தனர்போற்றிப்
பவமகற்றுகுற்றாலமார்பரனடிபணிந்தே
நவமணிச்செழும்பொருநைமாநதிக்கரையணிச்
சிவனுக்கற்புதச்சிந்துபூந்துறையினைச்சேர்ந்தார். (௫௭)

வந்துசிந்துபூந்துறையினின்மகிழ்ந்தினிதாடிச
சுந்தரக்கணபதியிருதுணையடிபோற்றி
யிந்துசேகரன்பதமலரினிதுடனிருந்து
சிந்தையன்றவக்குறுமுனிசாலையிற்சென்றார். (௫௮)

அகராதிபர்முனிவரர்தம்வரவறிந்து
மனவிருப்பொடுமெதிர்கொளமலையமாமுனிவ
னினைமலர்ப்பதந்தொழுதனர்நன்குடன்புகழ்ந்தா
ரினியதும்பனுமெதிர்தொழவந்துடனிருந்தார். (௫௯)

அரவணிந்தவர்க்கன்பனையருந்தவப்பொருப்பே
பரவைநீரொருதிவலையாக்கொண்டபண்ணவனே
குரவனேகொடிக்குக்குடக்குகனடிபணிந்து
பெருகுநல்லுபதேசமெய்ஞ்ஞானம்பெறறவனே. (௬௰)

சிறறவக்குறுமுனிவனேநெல்லைவாழ்நம்பன்
பொற்பதந்தொழவெங்களுக்கருளெனப்போற்றச்
சுற்றுசெஞ்சடைக்குறுமுனிசூழ்ந்தனனவரைப
பறறும்பான்பாலேக்கியேயினனணம்பகர்வான். (௧௧]

சத்தமாதவமுனிவரோசனகராதிபரோ
யத்தநெல்லைவாழமலன்மீதன்புடையவரே
நித்தனைநதொழப்போகுவம்யாமெனநெறிசேர்
சுநதீமாதவர்சூழவேதூய்முனிசென்றான். {௧௨)

மணிபொருந்துபொன்மதிளுறுவாயில்கோபுரங்கள்
குணினமுரசதிர்முன்றில்சூழ்மாடகூடங்கள்
துணரிளவாசநனமலரிளஞ்சோலைகள்பிறவு
மணிவளஞ்செறிநெல்லைமாநகரினையடைந்தார். (௧௩)

வந்துநெல்லைமாநகாவலஞ்செய்தனர்வடிவாள்
சுந்தரந்திகழ்கோபுரங்கண்டனர்தொழுதார்
கநதமார்கருமாரிபொறறுமறைகவுரி
சிந்தையன்புறுகோயிலுஞ்சூழ்நதனர்சிறநதார். (௧௪)

மாநநெல்லைவாழ்வடிவினைச்சேவித்துவணங்கி
நாதனுறதிருக்கோயிலைநலம்பெறச்சூழநதே
யாதுலிங்கமுமூலலிஙகதததையுமனபாய்ப
போதுகொண்டருச்சிததனாதொழுதனர்புகழ்ந்தார். (௧௫)

வேறு

தருமனவரததானநாயகர்சரணம்போறறித்
திருநடம்புரியுநதேவர்சிதம்பரேசுரரைப்போற்றி
மருவுகங்காளநாதர்மற்றுளோர்தமையும்போற்றி
யிருடிகளெவருமினபசாகரததினிதழ்ந்தார. [௧௬)

அகத்தியர்முனிவரோடுமமைவனநாதர்சம்மை
மிகத்தயவுடனேசேவைசெய்தனாவிடைகொண்டேகி
யிகத்தினிற்கலியைவென்றிங்கிருநதிடவெண்ணிநித்த
மகத்துவமானசிநதுபூநதுறைமருங்குவநதார். (௧௭)

குறுமுனியிருக்கைநின்றுங்காதறுமுனிவர்கூடி
யறிவினோரிடத்துவைஙயநதமாநதியின்பாங்க
ரிறுதியில்லாதசத்தவிருடிகடீர்ததமென்றே
யுறுதியினுண்டுபண்ணியுகந்தநதத்தீர்த்தமாடி. (௧௮]

பாமனைப்புகழ்ந்துபோற்றிப்பன்னசாலைகளுந்தங்கட்
கரிதினங்குண்டுபண்ணியனுதினந்திருநெல்வேலித்
திருமூலலிங்கமாதிலிங்கமுந்தெரிசித்தேத்தி
யுருகியசிந்தையோடுமுறைந்தவணிருந்தார்மாதோ. (௧௯}

புரிசடைப்பூதியக்கம்புனைந்துபுங்கவர்களெல்லா
மரியதோர்சிவலிங்கத்தையவரவர்தாமுண்டாக்கித்
திரமுறப்பூசைசெய்துசிவனுறைகோயில்சூழ்ந்து
விரைமலரடியைப்போற்றிமெய்த்தவம்பலவுஞ்செய்தார் (எ0)

இந்தவாறுண்டுநூறங்கிருந்தனரிவர்கள்செய்யும்
வந்தனைவழிபாட்டனைத்தவரந்தறிந்துதானே
சிந்தைவிரும்பியன்பாயத்திருமூலலிங்கத்தூடு
சுந்தரப்பணியோர்பாகர்துலங்கவேவந்துதோன்றி. (எக)

கலைமதிமுகமுங்காளகண்டமுங்கண்கண்மூன்றும்
குலவுமெண்புயமுங்கையிற்கொண்டமானமழுவுங்காட்டி
யலகிலபலகோடிகோடியாதவருதையம்போலு
மிலகொளிபரப்பிநின்றவிறைவனையெதிர்கண்டார்கள். (எஉ)

பரவினாகமலத்தாளைமேற்பணிந்தனர்சென்னிமீது
கரமலர்கூப்பிநின்றுகண்களினீர்கலுழ்ந்துவார
விரவிமெய்ப்புளகங்கொள்ளவைம்மினர்தொழுதுபோற்றிச்
சொரிமலர்சொரிந்தாம்பகந்தோத்திரம்பலவுஞ்சொன்னார். (எங)

பூதநாயகனேபோற்றிபுரமெரிசெய்தாய்போற்றி
நாதனேநம்பாபோற்றிநறுமலரிதழிசூடுஞ்
சோதியேபோற்றிபோற்றிதோகையோர்பாகாபோற்றி
நீதியினுலகுகாத்தநெல்லைநாயகனேபோற்றி. (எச)

திங்களைச்சூடிறைவாபோற்றிதேவர்கட்கிறைவாபோற்றி
தங்கவில்லேந்துசெங்கைத்தாணுவேபோற்றிபோற்றி
யங்கமோடக்கமவெண்ணீறணிந்துமமலாபோற்றி
வெங்கயமுரித்தாய்போற்றிவிமலனேபோற்றிபோற்றி. [எரு]

காலனையுதைத்தாய்போற்றிகருணைவாருதியேபோற்றி
சீலமாகமலமாதுசிறந்திடுதவங்கள்செய்ய
மாலைமுன்கூட்டுஞானவாவனநாதாபோற்றி
சூலகபாலாபோற்றிசோதியேபோற்றிபோற்றி. [எசு]

இனியதோத்திரங்களாதியிருடிகளியம்பலோடும்
புனிதநெல்வேலிமேவும்புண்ணியமூர்த்திசொல்வா
னனிதருமன்பானீங்களனைவருமித்துதியைக்கேட்டு
மனமகிழ்வுற்றேமம்வேண்டும்வரமுண்டேற்கேண்மினென்றான். [எஎ)

ஆரணப்பரியோன்கூறவருந்தவர்சொல்வாரெங்கள்
போற்றநாங்களன்பாயப்பிரதிட்டைபண்ணிலிங்கத்
தேர்பெறவென்றுநீதானிருந்திடவேண்டுமெங்கள்
காரணத்தீர்த்தந்தானெக்காலமுமிருக்கவேண்டும். (எஅ]

இந்தநற்றீர்த்தமாடியிலிங்கத்தைத்தெரிசிப்போர்கள்
பந்தமாமவினைகணீங்கிப்பாரினிற்செல்வமெய்தி
யந்தகன்றுணைநீங்கியருட்கயிலாயந்தனனில்
வந்துநற்கணங்களோடுமகிழ்ந்தினிதிருக்கவேண்டும். (௭௯)

பொருநைமாநதியிற்சிந்துபூந்துறையாவதாதி
வருந்துறகாதீர்த்தமுந்தாவாகினியவைக்குமன்பாயக
கருதியேதீர்த்தமாடிககலைவல்லாராயுணர்ந்து
தெரிசனைசெய்வோரொல்லாளுஞ்சிவகதியடையவேண்டும். (௮௰)

தென்மலைப்பொருநையாற்றிற்சிந்துபூந்துறையிலெய்தி
பன்னசாலைகளினூடுபரிவுடனிருந்துநாளும்
முன்னையேதெரிசித்தேத்தப்புலன்கனிந்தியமதாக
மன்னியநெல்லைநீங்காதிருந்திடவாரும்வேண்டும். (௮௧)

மன்னிருபபோடுமிந்தவரமதுமுனிவர்கேட்ப
வன்னனபடியேயாகுமென்றனுக்கிரகம்பண்ணிப
புனிதமெய்ஞ்ஞானமன்னோர்க்குபதேசம்பொருந்தப்பண்ணி
யினிதுமாலிங்கத்தூடேயிறைவனுமறைந்தானன்றே. (௮௨)

இன்னதோர்வரங்களெல்லாமின்றுடன்பெற்றேயீசன்
பொன்னடிபணிந்துபோற்றிப்புகழ்ந்துயவகலியுநீங்கிச்
சென்னல்சூழ்திருநெல்வேலிச்சிந்துபூந்துறையில்வந்து
பன்னசாலைகளினிதமபரிவுடனிருந்தாரன்றே. (௮௩)

செல்வநல்வளங்கள்பெற்றுச்சிவபூசைதினமுஞ்செய்து
மலர்ப்பேரன்பினோடுமெய்யானந்தம்விஞ்சித்
தெல்லையாயகலைந்ததநெறிமுறைபணிந்துபோற்றி
யெல்லையின்முனிவரெல்லாமினனமங்கிருக்கின்றால். (௮௪)

புரிசடைமவுலிபாங்குமபொருவினமாதவரோயினபந்
தருசனகாதிநால்வர்சத்தமாமுனிகள்காதை
திரமுறவிந்தவாறுசெப்பினோமுங்கடகின்னம்
பரமனாசரிதைகேட்குங்காதையைப்பகருமென்றான். (௮௫)

காவுடமபுவியினமிக்கநவசத்திமயமதாகு
மாவுடையாளுமூலலிங்கமுமொன்றாய்த்தோன்றி
மேவுமவ்விலிங்கம்போலவேறுளவிலிங்கந்தானு
மூவகைத்திறல்சூதமுனிவனேமொழிவாயென்றார். (௮௬)

இன்னணமுனிவர்கூறவினியதோர்சூதன்சொல்வான்
மன்னியதிருநெல்வேலிவளர்திருமூலலிங்கந்
தன்னுடைப்பெருமையெம்மாற்சாற்றலாந்தகைமைத்தன்றே
வன்னாற்கதையைச்சொல்வேனிந்தவாறென்றுசொல்வான். (௮௭)

சத்தவிருடிகள்கலியுகத்துக்கஞ்சிவந்துபேறுபெற்றசருக்கமுற்றும்-

ஆகத்திருவிருத்தம் ௲௩௱௨௫-

## திருமூலலிங்கச்சருக்கம்.

ஆதிநாயகனமைவனாயகனழிவிலாபபொருளானோன்
சீதநாண்மதிசூடியசேகரன்றினகரரொருகோடி
சோதிநாயகனசுந்தரநாயகனதூயவண்ணமையாளவோ
ருருவேயவனமூலலிங்கத்தினலமமைபெறவிருப்பானா. (௧)

ஆனதானவசத்தியாமாவுடையாளொடுமுடனமர்ந்திருக்க
கானவேதங்களறிவருங்காலமுங்கடைடபிரளய ... தாறு
மேன்மையாய்வளஞ்சிறந்தநெல்வேலியிலவிளங்கிமுதலிங்கந
தேறலாவுபொறகொணறைசூடியதிருமூலலிங்கமதாம. (௨)

இந்தவாறிரண்டாம்லிங்கங்கயிலையிலிருக்குமெனறிருக்கொதுரு
சுரகரச்சிருக்காசிமேனரும்லிங்கநான்குசொறறிகதார
மைந்தலெட்சுமிசிரிகிருக்காளத்தியாறுபொறசபையேழா
நதடாக்கசசியெட்டொனபதாலவாயநவலிங்கமிருப்பாரும். (௩)

முல்லைமால்பணிமூலலிங்கத்தொடைமொழிந்தனமவைதோனறு
மெல்லைதோறுஞ்சென்றினிதொடுசேவிபபோர்க்கெய்திடும்பலனெல்லாந்
தொல்லைவெம்பிறவித்துயாதீரசசெய்யதகொணடருக்கருளசுரு
நெல்லைவாழதிருமூலலிங்கத்தையேதொழப்பெறுவாரால. (௪)

முன்னுமாதியாம்பிரளயகாலத்திலுமுதிரிசைமனறயெல்லா
மன்னுமெப்பிரளயத்தினுமிறந்திடாவகையதுவரம்பெறவணடித
தன்னிநெல்லைமாநகரிடையிருந்திந்தசசோதியைததொழுதேத்தி
யினனரிததியமாகவேவேணுவாயினிதிருப்பதுவாகும். (௫)

தருமதேவதைதானுமித்தலத்திடைத்தவமொடுதானவந்தே
பெருந்தகாதமினிடபத்தினுருவமாயபபிரதோடம்வருங்கால
மருவுதீபதூபங்களைவேதத்தியம்வரதனூரமுனபாக
வரியபூசைகொண்டருளியெககாலமுமகன்றிடாதிருநதோங்கும். (௬)

வேறு

தாருகாவனத்துவாழுந்தாபதர்முன்னோர்காலஞ்
சேருமெய்த்தருமந்தானேதெய்வமென்றிருந்தெங்கோனைக்
கோரமாய்நிந்தைசெய்தகொடியதோர்பாவந்தீர
வாரமாய்த்தொழுதுபோற்றிமகிழ்திருமூலலிங்கம். (௭)

ஆதியாமிலிங்கத்தின்பேராந்திரிகண்டலிங்கம்
வேதலிங்கத்திரேணுவிட்டுணுட்பாவுலிங்கஞ்
சோதியாந்தருமலிங்கந்தூயதோர்கெவுரிலிங்க
நீதிசேர்தானலிங்கநிற்குணகற்பலிங்கம். (௮)

தெண்டியென்பவன்றும்பிரசபைதெரிசித்துப்
பண்டுதான்செய்நயவ மெலாமொழிந்தனனவனைக்
கண்டுநாகனுமுழையருங்கதியடைந்தனனொன்
றண்டர்நாயகனம்பிகைக்குரைத்தகமகிழ்ந்தான். (கசு)

ஈதெலாமுடனிருந்துகண்டெனையாளகுமரன்
பூதலத்தினிற்றும்பிரசபையலாற்பொருந்துந
தீதநீர்த்துநற்கதியருள்செய்வதொனறிலையென
றுதரத்துடனிச்சயித்தகமகிழ்சிறந்தான். (கஎ)

அந்தநற்கவன்றுநநூறரியவறவாறனைய
வைதிறற்சமன்சித்திரகுத்தனைவிளித்து
விந்தவஞ்சகரியற்றுபுண்ணியஞ்சிலவுளவோ
புந்தியோர்ந்துநீயுரையெனவாங்கவன்புகல்வான். (கஅ)

தெண்டிதாம்பிரசபைதெரிசித்தனனவனைக்
கண்டதுண்டிவராதலாற்கதியடைந்தனாகொ
லண்டர்நாயகர்முத்தியிவவாறுகந்தளித்தா
லெண்டகும்பலகிளையபினெருழிந்தெனறிசைத்தான். (ககூ)

காலன்சித்திரகுத்தர்சொல்வினவியேகனன்று
சீலமில்லவர்சிவகதிபெற்றனனொன்றுன்
ஞாலமீததிகாரம்யாதெனககெனநவின்று
பாலலோசனன்வெள்ளியம்பருப்பதத்தடைந்தான். (உ௦)

ஏகிநந்தியைவணங்கலும்போநதேனெனலு
மோகமுறறனுனினங்கொம்பாகமுயன்ற
நாகனறெண்டியேமுதலினோர்நற்கதியடைந்தா
ராகிலென்னதிகாரமென்றுமெனவறைநதான. [உக

கூற்றுவாய்மொழிகேட்டலுங்கோதிலாநந்தி
சீற்றங்கொண்டிலன்சிறியையநீகேளெனச்செப்பு
மாற்றுவேண்யான்றும்பிரசபைதனையடைந்து
போற்றினனைக்கண்டவர்கதிபுகுவதற்புதமோ. [உஉ]

என்னையாளுடையிறையவன்றும்பிரசபையி
னன்னர்மேன்மைமுற்றுணர்குவனுன்சிறிதறிவே
னுன்னெருடுஞ்சிலமுன்னுநானுரைத்ததுமுண்டான்
மன்னரிக்கமேம்பட்டதோமறநதனையெனறுன. [உங]

நல்லதென்றுபின்சித்திரகுத்தனைநந்தி
தொல்லைநல்லுயிர்ப்பிடர்தொறுமுன்னியேயெலையு
மொல்லையோருநின்கணக்கினுமிவர்க்குறுதரும
மிலலைகொலலென்றுனுளதுளதென்றவனிசைத்தான். உச]

போதிரப்புறத்தென்னனூநதியைப்பொருக்கென்
றுதாத்துடனவணங்கியேயர்தகன்மீண்டு
நீதிமேவியதன்னகர்க்கேகுறுநெறியிற்
சிதவானனச்சித்திரகுத்தர்களுச்செப்பும். (௧௫)

எவருமீட்டியவிருவினைப்பகுதியையெல்லாந்
தவறிலாதுநீயுணர்வனென்காரணஞ்சாற்றென்
றுவகையோடுரைசெய்திடுங்கூற்றுவனுணரச்
சிவனையுள்ளுணாசித்திரகுத்தனுஞ்செப்பும். (௧௬)

முன்னமேயெனைப்படைத்தான்முளரிநான்முகத்தோன்
றன்னதாயுளுஞ்சராசரப்பிடர்தொறுஞ்சார்ந்து
மன்னுபாவபுண்ணியந்தெரிவன்மையுமளித்தா
னெனக்கேட்டவெங்கூற்றுவனுனெழினகரடைந்தான். (௧௭)

வேறு.

வளாவனப்பரமன்றும்ரசபையின்மார்கழிச்செங்கையிற்
றிருநடம்புரியககண்டுசேவைசெய்மறையோன்றன்னைக
கருதிமுன்கணடோர்பெற்றகதியிதென்றுரைத்துப்பின்னுஞ்
சுருதிமாதவர்கள்கேட்பச்சூதமாமுனிவன்சொலவான். (௧௮)

தாமபிரசபைநடனந்தெரிசித்தவனும்அவனுடன்கூடினவரும்
கதிபெற்றசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—௬௮௮௰௭.

---

## தாம்பிரசபைநடனதெரிசனங்கண்டவேதியனைக் கண்டபாவிகதியடைந்தசருக்கம்.

வளாவனப்பரமன்றும்ரசபையின்மார்கழிச்செங்கையிற்
றிருநடம்புரிதல்கண்டுசேவைசெய்மறையோன்றன்னைக்
கருதிமுன்கண்டபாவிகதியினையடைந்தசாதை
சுருதிமாதவர்கள்கேட்பச்சூதமாமுனிவன்சொலவான். (௧)

பூதிசாதனங்கள்பூண்டுபுனிதனைப்புகழ்ந்துபோற்று
நீதிமாமறையோர்தம்பினெறியொடுமானூர்வாழும்
வேதியனொருவனெல்லைவிமலனைச்சேவைசெய்ய
வாதிரைநாளிற்சிந்துபூந்துறையதனிலாடி. (௨)

செபதவமுடிந்தபின்னர்த்திருநெல்வேலியினிற்றும்ர
சபையின்வாதுசூழ்ந்துதயவுடனடியாரோடு
முபையதாமரைப்பொற்றாளையுணர்வொடுசேவைசெய்தே
யபையுமின்னடிகளேழென்னையாளெனவன்பாய்ப்போறறி (௩)

நின்றவன்பின்னுமன்பாய்நிமலனாலயத்தைச்சூழ்ந்து
சென்றுவேய்முத்தைப்போற்றித்திருமூலத்தானைம்போற்றி
யொன்றனவரததானருடையதாளுறவேபோற்றிக்
கொன்றைசூடியைத்தன்னுள்ளங்கொண்டவன்வெளியிறபோந்தான். (௪)

தன்பதியானமானூர்தனிலவனேகும்போது
வனபழிபலவுஞ்செய்தோனொருவனவ்வழியில்வந்தான்
முன்புசெய்புண்ணியத்தின்முயற்சிசற்றங்குண்டாகி
யன்பொடுநோக்கிப்போந்தானந்தணன்மானூர்சேர்ந்தான். (௫)

மற்றையப்பாவிதானும்வதியுந்தன்பதியினேகி
யுறறுடன்சிலநாள்வைகியுடலுயிர்நீங்குங்காலை
சுறறுபாசத்தாற்காலனூதரங்கிழுக்கும்போது
கற்றைவார்சடையானேவக்கணங்களங்கெய்திச்சொல்வார். (௬)

நீங்கடானிவனைவிட்டுநீங்குமினென்றுகூற
வாங்கெதிர்நின்றனூதரறைகுவாரறிவொன்றில்லான்
தீங்கெலாஞ்செய்தபாவிசெகுத்துயிர்கொன்றுதின்றோ
னீங்கிவன்செய்தநன்மையெதுகொலோவியம்புமென்றார். (௭)

என்னலுங்கணங்கள்சொல்வாரிறைவன்வாழ்திருநெல்வேலி
மன்னுதாம்பிரமன்றத்தில்வரதனைச்சேவித்தோனை
முன்னுறவழியிற்கண்டான்முன்செய்தபவங்கடீர்ந்தான்
பொன்மணிவிமானத்தேற்றிக்கொண்டுநாமபோவோமென்றார். (௮)

கூறியமாற்றங்கேட்டார்கூற்றுவன்றூதர்போனா
ரேறியமானத்தோடுமிவன்றனைக்கொண்டுபோநதே
மீறியகணங்கண்மிக்கவெள்ளிவெற்பிடைதிலெங்க
ளாறணிசடையான்முன்னரன்பொடுவிடுத்துநின்றார். (௯)

கண்டனனென்னையாளுங்கடவுளைக்கயிலைவாழுந்
துண்டவெண்பிறையினானைத்தூயனைச்சோதியானை
யண்டர்நாயகனைமுக்கணமலனையாதியானைப்
பண்டுமாலறியாப்பாதம்பணிந்தெதிர்தொழுதுநின்றான். (௰)

நின்றவன்றன்னைநோக்கிநீதமிழ்த்திருநெல்வேலி
மன்றினினம்மைப்போற்றுமறையவன்றன்னைக்கண்டே
யொன்றியபவங்கடீர்ந்தாயாதலாலுலகமேத்த
வென்றுநங்கணங்கட்கெல்லாமிறைவனாயிருத்தியென்றான். (௰௧)

கடவுளங்குரைத்தவாறுகணங்களுக்கதிபனாகிப்
படரொளிவிமானமேறிப்பரிவொடுமிருக்கின்றானால்
நடமதுகண்டோன்றன்னைக்கண்டவனலமீதென்றாற்
றிடமொடுசேவைசெய்வோர்சிவனுருபபெறுகுவாரால். (௰௨)

அண்டர்நாயகனூர்தாம்ரசப்பதனிலாடுமாடல்
கண்டவன்றன்னைக்கண்டோன்கதிபெற்றகாதைசொன்னோ
மெண்டபோதனரோர்ங்களின்னமுங்கேளுமென்றே
துண்டவெண்பிறையோன்காதைசூதமாமுனிவன்சொல்வான். [௰௫],

நடனதெரிசனங்கண்டவனைக்கண்டவன்கதிபெற்றசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—௬௯௲௩௬.

## திருநெல்வேலித்தலபுராணம்படித்தவேதியனைக்

## கண்டபாவிகதியடைந்தசருக்கம்.

திருமகிழ்ந்துறைதிருநெல்வேலிப்புராணத்தைக்
கருதியபொருளுரைத்தருள்கடவுள்வேதியனை
வருவழித்தலைகண்டுமாபாதகரீங்கு
மொருவன்வெளியநகிரியடைந்துகதையுரைப்பாம். [௧]

ஓதுமாமறைவேதியர்குலத்திலுற்பவித்தோ
னீதியாவையுமிகழ்ந்துதங்குலநெறிநீங்கி
மாதர்மேன்மனம்வைத்துமன்மதனம்பாலவருந்தித்
தீதுதாம்பலசெய்திடுஞ்சிந்தையனுளன். [௨]

இங்கிதந்தருபாதத்தையரிழிகுலமடவா
ரொங்கையிறபுணர்குறிபபிறைறபொருளெலாங்கொடுத்தத
னங்கையிறபொருளபோனபின்றங்கவனிருடி
மங்கையர்களித்தவருடனமருவியேவாழ்வான். [௩]

சிந்தையஞ்சிலனவெங்கொலைபலவுமேசெய்வான்
சந்திவந்தனைமந்திரமறந்தசண்டாள
னிந்தைசெய்வெறிநீரினையருந்துவானீதி
யந்தனுளர்முனனூலிதுவென்பதுமறியான். [௪]

இன்னவன்பலதேயங்களெங்கணுந்திரிந்தே
புன்மையாவையும்யாவருமிகழவேபுரிந்தான்
றனனுழைப்பினையடைந்தபின்றாயநெல்வேலி
மன்னுமததலப்புராணவேதியன்முனம்வந்தான். [௫]

பொருவில்வேதியன்காத்தினிற்புத்தகப்பொலிவும்
பெருகுநெற்றியிறபுண்டரம்பெருகுபேரொளியு
மருவுமார்பினமுந்நூலொடுவயங்குமாமணியு
மருகுநின்றிருகணகளாலன்போடுபார்த்தான். [௬]

கண்டபோதுமுன்செய்தபாவங்கள்கட்டறவே
துண்டவெண்பிறைசூடிஞானிவனெனத்தொழுதான்
றெண்டிரைச்சிந்துபூந்துறைத்தீர்த்தத்திலாடி
யண்டர்நாயகன்வெய்வனச்சூழலினடைந்தான். [௭]

ஆதிநாயகியிடவுடையானடிபணிந்து
சோதிவேய்முத்தைமூலலிங்கேசனைத்தொழுதா
னாதனாலயஞ்சூழ்ந்துபின்னர்நியைவணங்கிப
போதுவாரொருபோதவனிருந்தனன்போந்தான். [அ]

வேய்வனப்பதிநீங்கியேவேறொருபதியிற்
போயடைந்தனனிருந்தனன்பொருநதியமூப்பாற்
சாயமெங்கணுந்தளர்ந்திடக்காலமுங்கழிய
மாயவெம்பிணிதுரபபவேயாங்கவன்மாய்ந்தான். [௯]

அந்தணனுயிரிறந்தபினந்தகன்றூதர்
வந்துபாசத்தாலிறுக்கவேவளைந்திடும்போதி
னெந்தைமுக்கணனேவியகணங்கடானெய்திச்
சிந்தையன்பொடுமானத்திலேறறினர்சென்றார். [௰]

சண்டனேவியதூதர்கள்சாறறுவாரிவனைக்
கொண்டுசெல்லுவீர்புண்ணியங்கூறிடுமென்றா
ரண்டர்நாயகன்றலபுராணம்படித்தவனைக்
கண்டுபாவங்கள்கட்டறக்கயிலையுங்காண்பான். [௧௧]

என்றுகூறினரேற்றியவிமானத்திருேடுங்
கொன்றைசூடிமுன்விடுத்ததூங்குழுகனைவணங்கி
வென்றிவெள்விடைப்பாகனேயருளௌவிளம்பத்
தூன்றுசெஞ்சடைப்பரமனுமன்பொடுசொல்வான். [௧௨]

தருதயாவொடுநெல்லையிறறலப்புராணததைக்
கருதும்வேதியன்றனைக்கண்டுகயிலையுங்கண்டாய்
பொருவில்கோடிநற்கணங்களைப்புரந்திடென்றுரைப்ப
மருவுமக்கணஞ்சூழ்ந்திடமகிழ்வுடனிருந்தான். [௧௩]

சதுமுகத்தவன்புகழ்நெல்லைத்தலபுராணத்தின்
கதைபுகன்றவன்றனைக்கண்டுகண்டபேறிதுவே
லதிகவித்தலத்திறந்தவர்பிறந்தவரடைந்தோர்
பதவியற்புதமேன்மையையாவரேபகர்வார். [௧௪]

ஆதலாலித்தலபுராணக்கதையனைத்தும்
போதமோடுளங்கொடுடன்யாவர்க்கும்புகல்வோர்
கோதிலெண்கணன்கூற்றிவர்செயலிடைக்குறுகார்
நாதன்வாழ்திருக்கயிலையிலிருப்பரொருநாளும். [௧௫]

வேறு.

மாலயனேமுதலானதேவருமித்தலமகிமைமகிழ்ந்துகேட்டுச்
சீலமுநன்னலமுமுயர்செல்வமுமேலாம்பதமுந்திருவும்பெறறார்
ஞாலமிசைமனுமாந்தர்முதலானமன்னவருநயந்துகேட்டே
யாலமுண்டகண்டரடிமலர்சேர்ந்தார்முக்கணனையெய்யாம். [௧௬]

தனிமுதலோனெல்வேலித்தலபுராணக்கதைதான் [illegible]
நனிபெறவேயுரைசெய்தேனுதனுயர்சரிதையெவர் [illegible]
முனிவரரோயுங்களுக்குரானதனிலறிந்தகதைமொழி [illegible]
கனிவினொடுபரமனிருகழனினைந்தசூதமுனிவ [illegible] (௰௭)

சீர்திகழுமுனிவரர்கணர்க்கசத்ரயாகமதுசெய்தேகோர [illegible]
வார்சடையானெல்வேலித்தலபுராணசகதையைமகிழ்ந்து [illegible]
யார்வமொடியாவருக்குமறியவுரைத்தமைவனத்தானருளைப்போற்றிப்
பேரறிவுமிகுந்துபரவசமடைந்தாருளமகிழ்ந்தினனுமாத்தார். (௰௮)

வேறு.

பொன்னின்மலர்க்கரங்குவித்தார்திசையைநோக்கிப்புரத்தினில்வெண்பொடிபுனைந்தார்புகழ்ந்தார்நின்று, மன்னுவிழிநீர்சொரிந்தார்புளகம்பூத்தார்வலையுமக்கமணிபுரண்டுமார்பிலாட, மின்னுமணிமவுலியிரிசடைகளாடமீதுபுனையுத்தரிகம்வீசியாடி, யெங்கிலமும்புகழ்திருநெல்வேலிதன்னையின்பமுடனினைந்தனரங்கெழுந்துபோந்தார். (௰௯)

சூதமுனிவரன்மகிழ்ந்துமுன்னமனபோதத்தூயமுனிவரர்களெல்லாஞ்சூழ்ந்துபோதக், காதலொடுவழிநடந்துகானயாறுங்கடுஞ்சுரமுங்கடந்துநெடுங்கானநீந்திப், போதலர்செந்தாமரைபொன்வாவிசூழப்பொருநைநதிப்புனல்சூழப்பூகஞ்சூழச், சீதமலர்ப்பொழில்சூழச்செந்நெல்சூழ்ந்ததிருநெல்வேலிப்பதியைச்சென்றுகண்டார்.

கண்டுவியந்தனர்சிரந்தொழுதுவாழ்த்திக் கலைபயில்மாதவர்களெல்லாங் கருத்திலேயுட், கொண்டுசிந்தபூந்துறையினெயதிமுதநிகொடுத்திடுமெய்ஞ்ஞானசிவதீர்த்தமாடி, விண்டொடுபொன்மாளிகைகோபுரங்கள்சூழ விளங்குதிருநெல்வேலிநீதிசூழ்ந்து, வண்டிசைகள்பாடுமதுவருந்துபொற்றாமரையில்வந்துபுனலாடிமகிழ்ந்துபோந்தார். (௨௰)

வந்துசவுனகராதிமுனிவரெல்லாம்வடிவுடையநாயகிதாள்வணங்கிவாழ்த்திச்
சிந்தைமகிழ்ந்தானந்தக்கண்ணீர்வாரச் சேவைசெய்து வரம்பலவும்பெற்றுமீண்டே, சந்திவனத்தெந்தைதிருக்கோயில்சூழ்ந்து சன்னிதியினின்றுநந்திதாளைப்போற்றிச, சுந்தரஞ்சேர்திருமூலலிங்கநாதா அணையடிச்செந்தாமரையைத்தொழுதுபோற்றி. (௨௧)

பெருகுவிருப்பொடுதுதிகள்பேசிப்போந்து பெருங்கருணையுடையபிரான்பிறையுடைமமான, கருமிடறுமானமழுவுங்காங்களுனருங்கண்மூன்றுநந்திருமுகமுங்கண்டார்கண்டே, நிருமலனைபரம்பொருளைநிகரிலானை நெல்வேலிநாயகனைநினைந்துபோற்றிப, பரவசமாயுளமுருகிப்பணிந்துசூழ்ந்துபண்ணவனேயென்றடிகள்பரவிபபோந்தார். (௨௨)

நதிபுனையுமம்பரனைவரததானநாயகர்செம்பொற்பாதங்களினம்போற்றிப், கதியுதவுநடராயாசரணம்போற்றிககங்காளநாதரடிக்கமலம்போற்றிப், புதியநறுமலர்க்கடம்பனைபொற்றுளபோற்றிபொல்லாதவிநாயகனைபுகழ்ந்துபோற்றி, மிதழிபுனைதண்டீசரிருதாளபோற்றியெழுபத்துமூவரையுமினிதுபோற்றி. (௨௩)

வந்துகழைவனம்பார்த்துமகிழ்ந்துபோற்றிவரதனடித்திடுதாம்ரசபையைப்போற்றிச், சுந்தரஞ்சேர்பிரகாரஞ்சூழ்ந்துபோற்றிச் சூதமுனிவரனொடுமாதவர்களெல்லாஞ், சிந்தைமகிழ்வுடனேசன்னிதியினவந்தார்செங்கமலமவிடையோனைச்சேவைசெய்தார், நந்திநாயகனைவிடைகொண்டுபோற்றிநல்லுமிநதப்படிசேவைநயந்துசெய்தார். (௨௪)

சிறந்ததிரு[illegible]மிக்கதேவராலயச்சிறப்புந்திகழநோக்கி, நிறைந்தமு னக்களிப்[illegible]நீதிமாதவர்வியப்பார்திகழ்த்தவல்லா,ரறந்தழைத்த தாபதர்க[illegible]டித்துணைநினைந்தங்கருளினோடி, யுறைநதுவளர்நயி மிசாரணிய[illegible]சிரமத்துமேசேர்நதார். (௰௬)

கண்ணுதலோனெல்வேலித்தலபுராணக்கதைபடிபபோர்கேட்போர்கள்கருதிரா ரு மண்மகிழ்நதுபுத[illegible]லைாநதோர்பாட்டி னுறுபொருளை யறிநதெவர்க்கும ைாத்திட்டோர்கண், மண்ணுலகின்மிகுநதசெலவம்பொருந்திவாழ்நதுவருபிரார த்துவசஞ்சிதங்கணீங்கி, யெண்ணில்பலகோடிகணநாதர்போற்ற விலகுகயிலாய வெறபிணிடத்துவாழ்வார். (௰௭)

அருந்தவராந்தணர்சிறுவர்மடவரராசாலுவிடுேதந்தைதாய்பாய்மாககெற்டம், வ ருநதவதைசெய்தோர்பொன்களவுசெய்தோர்மதுபானஞ்செய்தோர்வஞ்சகங்கள் செய்தார், பொருநதுனைநிமறநதோர்களேனுஞானப் புனிதர்தருநெலவேலிபபு ராணங்கேட்கிற், பரிநதகொடும்பாதகங்களனைத்துநீங்கிப் பரமனெங்கோனுறைந தபருப்பதத்தைச்சார்வார். (௰௮)

புனிதர்திருநெல்வேலித்தலபுராணம்பொறித்ததிருப்புத்தகத்தைப பூசிபபோர்க்கு ப், பனகபயமில்லையவமிருத்துவிலலைப்பாராளும்வேநதராற்பயமுமிலலை, மனதி லுறுவறுமையில்லைபபிணிகளிலலைமலர்மாதரோவல்செய்யமகிழ்நதெந்நாளுந. தன தனிலுமிகுநதசெலவமெய்தமபபாறசங்காளுரிரசதவெறபுதனைச்சார்வார். ௰௯

புந்தியறிவுடையவர்கடிருநெல்வேலிபபுராணத்தையாசனமேறபொருநதவைத்து ச், சிநதைமகிழவொடுபடிககுமிடங்கடோறுநஞ்சிமுத்துமவடிவுடையதேவிதானு ம், வநதிருநதுகருணையொடுகேட்பாரொன்றுன் மாநிலதது ளவரவாதம்மனைக்கண் ணேனுஞ், சுநதரஞ்சேர்கதைபடிபபோர்பெருமைய ரோ சொலலுவாரெனப்பெரி யோர்சொல்லுவாரால.

தேவர்களுமுனிவர்களுஞ்சிறநதுவாழகசிவமறையோர்வாழ்கமறைவேதம்வாழ்க ஆவினமுநதொண்டர்சூழாமனைத்தும்வாழ்கவாகமசாத்திரங்களுமெய்யறமும்வா ழ்க, மேவுசைவநெறிதிகழ்வைதிகமுமோங்கமேன்மைதருபூதிசாதனமுமோங்கப் பூவுலகுதழைகமழைபொழிகவேநதர்புகழோங்கமனுநீதிபொருந்திவாழ்க. (௨௰)

திருநெல்வேலித்தலபுராணம்படித்த வேதியனைககண்டடாசி

கதியடைந்தசருக்கமுற்றும்.

ஆகத் திருவிருத்தம்—௲௩௲அ௱௬௰௧.

---

# திருநெல்வேலித்தலபுராணம

## முற்றும்.